


# ரெக்ஸ் பற்றிய மிகவும் திருப்தியளிக்கும் இரண்டு அம்சங்கள்.

## ஒன்று, இதன் உன்னத தரம் — இப்போது, இதன் விலைநயம்.

**ஒவ்வொருவர் சுவைக்கும் ஏற்ற ஸ்க்வாஷ்கள் மற்றும் ஸிரப்களின் வகைகள்.**

ரெக்ஸ் ஸ்க்வாஷ்கள் மற்றும் ஸிரப்கள்— அதாவது, இனிமையான, இன்சுவையுள்ள, சாறு செறிந்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்ட உன்னத பானங்கள் இவை. கவனமுடன் தேர்ந்தெடுத்த கீர்த்தி யான பழங்களுடன் தூய கருப்பஞ் சாற்றுப் பாகும், விசேஷமான இதர சரக்குகளும் சேர்த்துத் தயாரிக்கப்படுகின்றன. சுவைத் தரியாத புத்துணர்ச்சி தரும் பானங்கள் இவை. இப்போது ரெக்ஸ் பானங்கள் சகாய விலையில் கிடைக்கின்றன. ரெக்ஸ் பானங்களைவிட அதிக திருப்தியளிக்கும் பானங்கள் வேறென்ன இருக்க முடியும்?

- ஆரஞ்சு ஸ்க்வாஷ்
- ஆரஞ்சு கிரஷ்
- லெமன் ஸ்க்வாஷ்
- லெமன் பார்லி
- லைம் ஜூஸ் கார்டியல்
- மாங்கோ ஸ்க்வாஷ்
- கோலா கான்ஸன்ட்ரேட் ஃப்ரூட் ஸிரப்
- ராஸ்பெர்ரி ஸிரப்
- ஸ்ட்ராபெர்ரி ஸிரப்
- பைனாப்பிள் ஸிரப்
- ரோஸ் ஸிரப்

கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி
(இந்தியா) பிரை. லிட். பம்பாய்-1.

# "அவள் படிப்பிலும் விளையாட்டுக்களிலும் ஒரே போல் கெட்டிக்காரி!"



ஆனால், சில நாட்களுக்கு முன் அவளுக்கு ஒரே மந்தம். நான் டாக்டரை விசாரித்தேன்.

டாக்டர் சொன்னார்: "அவ-ளுக்கு தினமும் ஹார்லிக்ஸ் கொடுங்கள்."

ஹார்லிக்ஸ் சாப்பிட்ட பின் அவள் படிப்பிலும் விளையாட்-டுக்களிலும் ஒரேபோல் கெட்டிக்காரியாக மாறிவிட்டாள்!



**ஹார்லிக்ஸ் அவளைக் கெட்டிக்காரியாக மாற்றிற்று!**

வளரும் குழந்தைகளுக்கு தெம்புடன் திகழத் தேவையான அதிக சக்தியை அளிக்க ஹார்லிக்ஸ் உதவுகிறது. டாக்டர்கள் குழந்தைகளுக்கு ஹார்லிக்ஸ் சிபார்சு செய்கிறார்கள். உங்கள் மகளுக்கும் ஹார்லிக்ஸ் தேவை!

ஆடைச் சத்து நிறைந்த பாலுடன் கோதுமை மாவு மற்றும் மால்ட்டெட் பார்லியின் போஷாக்குச் சத்துக்கள் சேர்ந்தது




## ஹார்லிக்ஸ் அதிக சக்தியை அளிக்கிறது!



# கல்கி

## பொருளடக்கம்



சாதாரண, வைகாசி. 31 — 1970. ஜூன். 14



அட்டைப்படம் : உதயபாஸ்கர்.

"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |


"நோயாளி ஆபத்தான நிலையில் இருக்கிறார்"
நாட்டு நிலை அறிக்கை
சட்டமும் சமூக ஒழுங்கும்
SAMA


நாளுக்கு நாள் குறைந்து வரும் சுதந்திரமும் சுபிட்சமும்



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 29 □ இதழ் 46



# மதச்சார்பின்மை, லாட்டரிகள், கருத்தடை

நமது அரசு சமயச் சார்பற்றது என்கிறோம். அதன் பொருள் என்ன? சிறுபான்மையினராக இருக்கும் சமயத்தினர் எல்லோரும், ஒழிந்து பெரும்பான்மையினரைப் போலவே சமமாக நடத்தப்பட வேண்டும்; மதத்தின் காரணமாக எந்தத் தகுதியின்மையும் அவர்களுக்கு ஏற்படலாகாது. இது தான் உண்மையான பொருள். நமது அரசு எல்லா மதத்தையும் வெறுக்கிறது என்றோ, மதம் என்பதற்கே மதிப்புத் தருவதில்லை என்றோ பொருள் கொள்ளலாகாது. ஆனால் துரதிருஷ்டவசமாக மதச் சார்பின்மை என்றால் நமது அரசு தெய்வ நம்பிக்கையற்றது என்று பொருள் கொள்ளப்பட்டு வருகிறது. இந்தப் போக்கை நான் வன்மையாகக் கண்டிப்பவன் என்பதை நாடு அறியும்.

* * *

அநேகமாக எல்லா மாநிலங்களுமே லாட்டரிகளை நடத்துகின்றன. இதன் மூலம் எல்லா வகை மக்களையும் சூதாட்ட மனப்பான்மையினராக அவை மாற்றி விடுகின்றன. இது மிக விசனிக்கத் தக்கது. இந்த மனமாற்றம் மெதுவாக நடைபெறுவது அல்ல; மிக விரைவாகவே அது ஏற்றம் காண்கிறது. இன்றையத் தேவை உழைத்து முன்னேறுகின்ற மனப்பான்மையை வளர்ப்பதுதான். ஆனால் அதற்குப் பதிலாக, மாற்றவே முடியாத சூதாட்ட மனப்பான்மையை இந்த லாட்டரித் திட்டங்களும் அவை சம்பந்தமாக நடைபெறும் காரியங்களும் வளர்க்கின்றன. மத்திய சர்க்கார் உடந்தையாக நிற்க, மாநில சர்க்கார்கள் கேடு கெட்ட வழியைப் பின்பற்றி நமது மக்களுக்கும் நாட்டுக்கும் பெருந் தீங்கு இழைத்து வருகின்றன.

பன்முறை கூறியதையே மீண்டும் எடுத்துச் சொல்லுகிறேன். அரசாங்க லாட்டரிகள் சோஷலிஸ கோஷத்துக்கு நேர் எதிரிடையானவை.

எந்தக் கட்சியைச் சேர்ந்தனவாக இருந்த போதிலும் அரசாங்க லாட்டரிகளைச் சர்க்கார்கள் நடத்துவது மிக வருந்தத் தக்கது. ராஜ்யத் தலைவர்களிடம் சூதாட்ட ஆசை மறைந்து கிடக்கிறது போலும்! அதன் காரணமாகத்தான் இந்த லாட்டரிகளுக்கு ஏற்பாடு செய்து அந்தப் படுகுழியில் மக்கள் விழுவதற்கு அவர்கள் வழி செய்கிறார்கள் போலும்! ஆண்களும், பெண்களும் லாட்டரிச் சீட்டு விற்கும் கடை வாசலில் நிற்பதைப் பார்க்கும் போது இந்தத் தேசம் ஒரு புதிய சாபத் தீட்டிற்கு உள்ளாகி விட்டது போன்ற உணர்வு எனக்கு ஏற்படுகிறது. உழைத்து முன்னேறுவதற்கான கொஞ்ச நஞ்ச சக்தியையும் இது உறிஞ்சிவிடும் போல் தோன்றுகிறது. சிறிதளவு நிதி திரட்டுவதற்காகத் தொன்மையான நல்லுரைகளை நமது சர்க்கார்கள் புறக்கணித்து விட்டன. ஏற்கனவே வரிகளாகவும் அவற்றின் மீது உபரி வரிகளாகவும் மக்களிடமிருந்து நிறையக் கசக்கிப் பிழிகிறார்கள். லாட்டரி மூலம் சேர்ப்பது அந்தத் தொகையில் ஒரு சிறு துளியே என்பது குறிப்பிடத் தக்கது.

உணவுப் பற்றாக்குறைப் பிரச்னையைச் சமாளிப்பதற்கு உள்ள வழி ஒன்றே ஒன்றுதான். பெரிய அளவில் விளைச்சல் பெருகுவதற்கு வேண்டிய வசதிகளை அளித்து ஊக்கத்தை உண்டு பண்ணுவதுதான் அந்த வழி. ஆனால் தறிகெட்டுப் போய் ஜனத் தொகையைக் குறைப்பதன் மூலம் உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதில் நமது அரசு முற்பட்டிருக்கிறது. உண்ணும் வாய்களின் எண்ணிக்கையைக் குறைத்துவிட்டால் உணவு உற்பத்தித் துறையில் நமது பிரச்னைகள் குறைந்துவிடும் என்று ஏட்டுக் கணக்குப் போடுகிறார்கள். கணக்கில் பழுது ஒன்றுமில்லை. ஆனால் படிப்பில்லாமல் இருந்துவரும் பெருவாரியான மக்களின் விவகாரங்களை எவரும் வெறும் கூட்டல் கழித்தல் விஷயமாகக் கருத முடியாது. கருத்தடைத் திட்டம் அனைத்துமே உண்மையில் பொதுப்

பணத்தை வீணடிக்கும் ஏற்பாடுதான். அது ஊழலின் உறைவிடமாகி விட்டது; பித்தலாட்டத்தை வளர்க்கிறது. இதை யாராலும் மறுக்க முடியாது.

கருத்தடைத் திட்டமானது நடைமுறைக்கு ஒவ்வாதது. அதனால் நமது ஆன்மிகம் பெரிய அளவில் பாதிக்கப்படுவதைக் கண்டு வருத்தப்படாமல் இருக்க முடியாது. இயற்கையான விளைவுகளிலிருந்து ஆண் பெண் உறவுமுறைக்கு விடுதலை அளிக்க இத்திட்டம் முற்படுகிறது. இதன்மூலம் ஒழுக்கக் குறைவு ஊக்கப்படுகிறது. வழி வழியாக வந்த அடக்க ஒடுக்கங்களெல்லாம் கைவிடப்படுகின்றன. ஆண்களும் பெண்களும் சேர்ந்து படிப்பது, சேர்ந்து வேலைசெய்வது, உரிய காலம் கடந்து திருமணம் செய்து கொள்வது போன்றவை இப்பொழுது சகஜமாகி விட்டன. இச்சூழ்நிலையில் கருத்தடைச் சாதனங்கள் ஒழுங்கீனத்தை வளர்ப்பதற்கே பயன்படக்கூடும்.

இதுவரை குழந்தைகளைக் கண்டு ஆனந்தப்படுவது வழக்கம். இப்பொழுது வேண்டா வெறுப்புடன் அவைகளை நோக்குகிறார்கள். டாக்டர் எஸ். சந்திரசேகரும் அவரது விளம்பரங்களுமே இதற்குக் காரணம். குடும்ப வாழ்க்கையின் மகிழ்ச்சியைக் கருத்தடை ஆதரவாளர்கள் சிதைத்து வருகின்றனர். இது பெரிய பாபச் செயல். கருத்தடைச் சாதனங்கள் இல்லாதிருந்த காலத்தில் குழந்தைகள் நிறைந்த வீடு அழகே உருவானது என்று கருதப்பட்டு வந்தது. ஆனால் இன்று கொசுக்களைப் போலவே குழந்தைகளையும் வெறுக்க வேண்டும் என்று நமக்குப் போதிக்கிறார்கள். இது மாபாதகம் என்பது எனது கருத்து. இதனால் நமது ஆன்மாவே கெட்டுப் போகிறது.

நமது உண்மையான பலம் நம்முடைய மக்களின் ஜனத்தொகையில்தான் இருக்கிறது; அணு ஆயுத பலத்தில் அல்ல. அணு ஆயுதங்களை நாம் தயாரிக்க வேண்டுமென்று போர் மனப்பான்மையுள்ள ராஜீயவாதிகள் கூறி வருகிறார்கள். அது நமது வலிமையைக் கூட்டாது. எப்பொழுதுமே மேலை நாடுகள் சீனாவிடம் அச்சமுள்ளவையாக இருந்து வந்திருக்கின்றன. இதற்குக் காரணம் என்ன? அதன் பெரிய ஜனத்தொகைதான். நமது ஜனத்தொகையைக் குறைப்பது ராணுவ வகையில் விவேகமாகாது. சமாதானமும் சௌஜன்யமும் நிலைத்து நிற்கக் கூடிய அளவுக்கு உலகம் இன்னும் பக்குவம் அடைந்துவிடவில்லை. யுத்தங்களை இன்னும் ஒழித்து விடவில்லை. இந்நிலையில் மக்கள் தொகையைக் குறைக்கலாகாது.

விவிலிய நூலின் 127வது பாசுரம் பின்வருமாறு கூறுகிறது:

''வீடு அமைவது ஆண்டவன் அருள். அந்த அருளின்றி அது உருவாக இயலாது. நகரின் காவலன் ஆண்டவனே. காவலாளி விழித்து அதைப் பாதுகாப்பதாக நினைக்கலாகாது.

''ஆண்டவன் நமக்கு அருளும் செல்வம் குழந்தைகள். பிறப்பு அவனது திருவருளின் விளைவே.

''வலிமை படைத்தவனுக்கு அம்புகள் பலம் கூட்டுவதுபோல் குழந்தைகள் சமூகத்துக்குப் பலம் தருகின்றன.

''பெரிய குடும்பமுடையவன் இன்பமுடையவன். அதற்காக வெட்கப்பட வேண்டியதில்லை. பகைவர்களை அடக்குவதற்குக் குழந்தைகள் பயன்படுவர்.''

ஈசாவாஸ்ய உபநிடத மந்திரத்தில் கூறியிருப்பதைத்தான் மேலே குறித்துக் காட்டிய முதல் பாசுரமும் கூறுகிறது. ஜனத்தொகையைக் குறைக்காமல் இருப்பதுதான் விவேகம் என்று மேலே எடுத்துக் காட்டிய பாசுரங்களிலிருந்து தெளிவாகிறது. நமது மனித பலத்தைக் காப்பாற்றிக் கொள்வது தான் விவேகம். சமுதாயத்துக்கு வலிமை தருவது சமுதாயத்துக்காக உயிரைத் தியாகம் செய்வதற்கு மக்கள் எந்த அளவு தயாராக இருக்கிறார்கள் என்பதையே பொறுத்தது. ஜனத்தொகை குறைந்து, உயிர்த் தியாக உணர்வும் அற்றுப் போய் விட்டால், உண்மையில் புறத் தோற்றம் எவ்வாறு இருந்த போதிலும், சமுதாயத்துக்கு அதோகதிதான்.

**('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)**

# விஞ்ஞான விந்தை

டாக்டர் ஹரகோவிந்த கொரானா என்ற இந்திய விஞ்ஞானி, பாரம்பரியத்தை நிர்ணயிக்கும் உயிரணுவை சிருஷ்டித்து, உயிரின் பாரம்பரியத்தை ஆராயும் விஞ்ஞானத் துறையில் மகத்தான புரட்சி உண்டாக்கி விட்டார். ஏற்கனவே டாக்டர் கொரானா பாரம்பரிய உயிரணு ஆராய்ச்சியில் மகத்தான விஷயங்களைக் கண்டுபிடித்து 1968ம் வருஷத்தில் நோபல் பரிசு பெற்றார். இப்பொழுது நிகழ்த்தியுள்ள புதிய சாதனை மகத்தான விளைவுகளை ஏற்படுத்தக் கூடியதாகும். அவை யாதாக இருக்கக்கூடும் என்று டாக்டர் கொரானாவைக் கேட்டால் சொல்லத் தயங்குகிறார். ஆயினும் பரம்பரை நோய்களாகக் கருதப்படும் நீரிழிவு, மன நோய் போன்றவற்றுக்கு நிரந்தர பரிகாரம் காண உதவலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. கான்சர் போன்ற நோய்களைக் குணப்படுத்தவும் இந்த ஆராய்ச்சி உதவலாம் என்று விஞ்ஞான அறிஞர்கள் கூறுகின்றனர்.

அணுவுக்குள் அடங்கியுள்ள சக்தியைப் பற்றி முதன் முதலில் சொன்ன ஐன்ஸ்டீன் போன்ற விஞ்ஞான மேதைகள் அது மனிதனின் நன்மைக்கே பயன்படுத்தப்படும் என்று நம்பினர். ஆனால் அரசியல்வாதிகள் அதனை அழிவுக்குப் பயன்படுத்தினர். டாக்டர் கொரானாவின் ஆராய்ச்சியும் மனிதனின் மிருக குணத்தை வளர்க்கப் பயன்படாமல் தேவ குணத்தை வளர்க்கப் பயன்படுத்தப்பட வேண்டும். அப்படிப் பயனாகுமானால் இந்த ஆராய்ச்சி இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் பெரும் புகழ் தேடித் தந்ததாகும்!

# ராஜாஜியின் கருத்துக்கள்

'வகுப்புவாத உணர்ச்சியை எதிர்த்துப் போரிடுக' என்று ராஜ்ய சர்க்கார்களை நோக்கி உபதேசிக்கிறார் பாரதப் பிரதமர். வகுப்புவாத உணர்ச்சிகளையே — பற்று உணர்ச்சி அல்லது பகை உணர்ச்சியையோ — ராஜ்ய சர்க்கார்கள் பெரிதும் சார்ந்திருக்கையில் அவர் இவ்விதம் பேசுவது கேலித்தனமாகும்.

இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும் உள்ள வகுப்புவாத உணர்ச்சிகள் எந்தச் சர்க்காரையும்விட, எந்த அரசியல் சாஸனத்தையும்விட உறுதியாகிவிட்ட நடைமுறை உண்மைகளாகும். மதத்தை விட்டு நிரீச்வரவாதிகளாகவோ, நாஸ்திகர்களாகவோ ஆகிவிடுவதால் வகுப்பு உணர்ச்சியை அகற்றிவிட முடியாது. ஆண்டவனை அகற்றிவிட்டபோதிலும் அதன்பின் வகுப்புவாதம் அழுத்தமாக நிற்கவே செய்யும். மத நம்பிக்கையை வளர்த்துப் பகவானிடம் பற்றுதலை உண்டாக்கினாலே வகுப்புப் பற்றை ஒழிக்க முடியும்.

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு**

*

ருஷியா குறித்தும், இந்திய கம்யூனிஸ்ட் கட்சிகள் குறித்தும் ஆளும் காங்கிரஸின் இன்றைய கொள்கைகள் மாறவேண்டும்; மாறாவிடில், இந்தியாவிலும் இலங்கையைப் போல் மந்திரி சபையிலேயே கம்யூனிஸ்ட்களைச் சேர்த்துக் கொள்ளும் நிலை வரக்கூடும் என்று 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' (ஜூலை 2) எச்சரிக்கை செய்கிறது. அது கூறுவதாவது :

''அதிகார ஆசையில் வெறி கொண்ட தலைவர்கள் எந்த உபாயத்தையும் அதற்காகப் பின்பற்ற முற்படுகையில் நமது நாட்டிலும் என்ன நேரக்கூடும் என்பதற்கு இலங்கைத் தேர்தலிலிருந்து இந்திய மக்கள் எச்சரிக்கை பெறவேண்டும். அடுத்த பொதுத் தேர்தலின்போது ஒவ்வோர் இந்தியப் பிரஜையும் தனது தேசக் கடமையை உணர்ந்து நடக்க வேண்டும் என நாட்டு நலன் விழைகிறது. மற்றோர் அந்நிய வல்லரசிடம் அடிமைகளாவதற்காக நாம் சுதந்திரம் பெறவில்லை.

''மாஸ்கோவில் உள்ள 'குருமார்'களுக்கு தண்டம் சமர்ப்பித்துவிட்டு இந்திய சர்க்காரின் வெளிநாட்டுக் காரியதரிசியின் தலைமையில் அமைந்த அதிகாரபூர்வமான குழு பாரதம் திரும்பியுள்ளது. இவர்கள் கடைசியாக சோவியத் தலைமைப் பீடமான க்ரெம்ளினுக்கு க்ஷேத்ராடனம் போய்த் திரும்பியபின் தான், தில்லியின் முறையீட்டு ஓலங்களுக்குச் செவி சாய்க்காமலே, ருஷியா பாகிஸ்தானுக்கு மேலும் ஆயுதங்களை வழங்கியிருக்கிறது.''

*

ஏதோ ஒரு கோரிக்கையையோ குறைபாட்டையோ ஆதாரமாகக் கொண்டு ஒரு கிளர்ச்சி நடந்தால், உடனடியாக வன்முறையை நிறுத்துவதோடு, நிரந்தரமாக நிர்வாக ரீதியிலோ அரசியல் ரீதியிலோ அதைக் குறித்து நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும். ஆனால் கம்யூனிஸ்டுகள் கிளர்ச்சி நடத்தி வன்முறைச் செயல்களில் ஈடுபடுவதும், சட்டத்தை மீறுவதும் இது போன்ற விஷயமல்ல. இதைப் போர் தொடுப்பதாகவே சொல்ல வேண்டும். இதைவிடக் குறைவாகச் சொல்வதற்கில்லை. அரசியல் சாஸனத்தைக் கிழித்தெறிந்து விட்டு சர்வாதிகார சர்க்காரை ஏற்படுத்தவேண்டும் என்பதே கம்யூனிஸ்டுகளின் அவா. இப்படிப்பட்டவர்களின் கிளர்ச்சியைச் சமாளிப்பதற்கு, போர் தொடுப்போரைச் சமாளிக்க என்ன நடவடிக்கை எடுக்க வேண்டுமோ அப்படிப்பட்ட நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். வெறும் பேச்சும், நிதான நடவடிக்கையும் உதவா; உதவாமற் போவதோடு கிளர்ச்சிக்காரர்களுக்கு மேலும் ஊக்கம் தருவதும் ஆகும்.

குறளாசிரியர் மக்களைக் காத்தாளும் மன்னர்களுக்குச் சொல்லும் எச்சரிக்கையைக் கவனிக்க வேண்டும்:

**இளைதாக முள்மரம் கொல்க; களையுநர்**
**கைகொல்லும் காழ்த்த இடத்து**

★

இம்மாத ஆரம்பத்தில் சென்னை நகரம் குளிரும்படி மழை வந்தது. என் மனத்தைக் குளிரச் செய்யும்படி ஸ்ரீ மொரார்ஜி தேசாய் என்னைக் காண வந்தார். என்னோடு அரை மணி இருந்தார். அவரது தைரியத்தையும், சக்தியையும், நம்பிக்கையையும் கண்டு மகிழ்ந்தேன். என் அவநம்பிக்கையைத் துடைத்து நம்பிக்கையூட்டி, என் உள்ளத் திரியைத் தூண்டிப் பிரகாசிக்கச் செய்தார்.



## அநுபூதி கண்ட ஆங்கிலேயர்

தெய்வ சங்கற்பம் எத்தனை விந்தையானது! ஆக்ஸ்போர்டில் எம். ஏ. படித்துத் தேறி, தாய்லாந்தில் விரிவுரையாளராக இருந்த ஆங்கிலேயர் ஆர்தர் ஆஸ்போர்ன், ஜப்பானியப் படையெடுப்பில் நாலாண்டு சிறைவாசம் செய்தபின் எப்படியோ ஓர் அருள் அலை அவரைத் திருவண்ணாமலையில் கொண்டு வந்து தள்ளியது. ஜீவன்முக்த நிலையின் பிரத்தியட்ச வடிவமாக விளங்கிய பகவான் ரமண மகரிஷியின் ஞான சக்திக்கு மீளா அடிமையானார் ஆஸ்போர்ன். பத்து ஆண்டுகள் மகரிஷிக்கு அரும் பணி புரிந்து, அவரது தத்துவங்களை மேலைநாடுகளில் எல்லாம் பரப்பிய உத்தம நூல்களை இயற்றினார். மகரிஷி மறைந்தபின்னும் இருபது ஆண்டுகளாக ரமணாச்ரம சஞ்சிகையான 'மவுண்டன் பாத்'துக்கு ஆசிரியராகச் சிறப்புப் பணி புரிந்தார். ஆன்ம பக்குவத்தில் உயர்ந்த இந்த ஆங்கிலேய மகானுபாவர் மே 8ந் தேதி திருவருணைத் திருச்சோதியில் இரண்டறக் கலந்து விட்டார்.

இரண்டாம் அத்தியாயம்

## பாட்டனும் பேரனும்

பின்னால் ரதத்தில் வந்த கிழவர் சமிக்ஞை செய்யவே, ஆதித்தகரிகாலன் குதிரையைத் திருப்பிக் கொண்டு அவர் வீற்றிருந்த ரதத்தின் அருகில் சென்றான்.

''குழந்தாய்! கரிகாலா! நான் இவ்விடத்தில் உங்களிடம் விடைபெற்றுக் கொண்டு திருக்கோவலூர் போக எண்ணுகிறேன். போவதற்கு முன்னால் உன்னிடம் சில முக்கிய விஷயங்கள் சொல்ல வேண்டும். சற்றுக் குதிரையிலிருந்து இறங்கி அந்த அரசமரத்தடியிலுள்ள மேடைக்கு வா!'' என்றார்.

வந்து விடுவாரோ எனப் பயந்து கொண்டிருந்தேன் !'' என்றான்.

'' அப்படித் தொடர்ந்து வந்தால் இவரை வெள்ளாற்றின் பிரவாகத்தில் தள்ளி மூழ்க அடித்து விடுவது என்று நான் எண்ணியிருந்தேன் !'' என்றான் கந்தமாறன்.




''அப்படியே ஆகட்டும், தாத்தா!'' என்று ஆதித்த கரிகாலன் குதிரையிலிருந்து கீழே குதித்தான்.

கிழவரும் ரதத்திலிருந்து இறங்கினார்.

இருவரும் அரசமரத்தடி மேடைக்குச் சென்றார்கள்.

அப்போது பார்த்திபேந்திரன் கந்தமாறனைப் பார்த்து, ''நல்லவேளையாய்ப் போயிற்று. இந்தக் கிழவர் 'விடேன் தொடேன்' என்று நம்முடன் நெடுகிலும்

இருவரும் தங்கள் பேச்சில் தாங்களே சிரித்து மகிழ்ந்தார்கள்.

ஆதித்த கரிகாலனைப் பார்த்து மலைநாடு உடையாராகிய திருக்கோவலூர் மலையமான் சொல்லலுற்றார் :

''ஆதித்தா ! இன்றைக்கு இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் நீ பிறந்தாய்! திருக்கோவலூரில் என்னுடைய அரண்மனையிலேதான் பிறந்தாய்! அச்

சமயம் நடந்த கொண்டாட்டங்கள் நேற்று நடந்தது போல் எனக்கு ஞாபக மிருக்கின்றன. உன்னுடைய குலத்தைச் சேர்ந்தவர்களும் என்னுடைய குடியைச் சேர்ந்தவர்களும் சோழ நாட்டையும் தொண்டைநாட்டையும் சேர்ந்த சிற்றர சர்கள் பலரும் வந்திருந்தார்கள். இவர்கள் எல்லாரையும் சேர்ந்த வீரர்கள் முப்பதினுயிரம் பேர் வந் திருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் நடந்த விருந்தின் விமரிசையைச் சொல்லி முடியாது. உன் தந்தையின் பட்டாபிஷேக வைபவத்தின் போது கூட அத்தகைய விருந்துகளும் கோலா கலங்களும் நடைபெற வில்லை. என் பொக்கிஷத்தில் என் முன்னேர்கள் காலத்திலிருந்து நூறு வருஷங்களாகச் சேர்த்து வைத்திருந்த பொருள் அவ்வள வும் அந்த மூன்றுநாள் கொண்டாட்டத் தில் தீர்ந்து போய் விட்டது !

''அச்சமயம் உன்னுடைய கொள்ளுப் பாட்டனுராகிய பராந்தக சக்கரவர்த் தியே திருக்கோவலூருக்கு வந்திருந் தார். உன் பெரிய பாட்டனுர் கண்ட ராதித்தரும் உன் தந்தை சுந்தர சோழரும் வந்திருந்தார்கள். ஆண் குழந்தை பிறந்த செய்தி அறிந்ததும் அவர்கள் அனைவரும் அடைந்த ஆனந் தத்துக்கு அளவே யில்லை. சோழர் குலத்தை விளங்க வைப்பதற்கு நீ பிறந்து விட்டாய் என்று குதூகலம் அடைந்தார்கள். உன் பாட்டனின் மூத்த தமையன்மார்களுக்கு அதுவரை யில் சந்ததியில்லை. அரிஞ்சயனுக்கும் உன் தகப்பன் ஒரே மகனுக விளங் கினுன். அவன் உன் பிராயத்தில் மன் மதனை ஒத்த அழகுடன் விளங்கினுன். சோழகுலத்திலோ அல்லது தமிழகத்துச் சிற்றரசர் வம்சத்திலோ அவ்வளவு அழகுடைய பிள்ளையை யாரும் அதற்கு முன் கண்டதில்லை. இதனுல் உன் தந்தைக்குச் சில சங்கடங்களும் நேர்ந் தன. குடும்பத்தார் அனைவருக்கும் அவன் செல்லப் பிள்ளையாக இருந்தான். அரண்மனைப் பெண்டிர்கள் அவனுக்குப் பெண் வேடம் போட்டுப் பார்த்து மகிழ்ந்தார்கள். 'இவன் மட்டும் பெண் ணுய்ப் பிறந்திருந்தால்?' என்று பேசிப் பேசிப் பூரித்தார்கள். உன் தந்தைக்குத் தங்கள் பெண்ணைக் கொடுப்பதற்கு இலங்கை முதல் விந்திய பர்வதம் வரை யில் உள்ள மன்னுதி மன்னர்களும் சிற்றரசர்களும் தவம் கிடந்தார்கள். அர்ச்சுனனையும் மன்மதனையும் நிகர்த்த அழகன் அவன் என்பதுடன் சோழ சிங்காதனத்துக்கு உரியவன் என்ற எண்ணத்தினுலும் அவ்வளவு ஆர்வத் துடன் இருந்தார்கள். உன் தந்தையை மருமகனுகப் பெறும் பேறு கடைசி யில் எனக்குக் கிடைத்தது.

''எங்கள் வம்சத்தில் நாங்கள் ஆண் ஆகட்டும், பெண் ஆகட்டும் மேனி அழகுக்குப் பெயர் போனவர்கள் அல்ல. ஆண் பிள்ளைகள் உடம்பில் எத்தனைக் கெத்தனை போர்க் காயங்களைப் பெறு கிருேமோ, அவ்வளவுக்கு அழகுடைய வர்களாக எண்ணிக் கொள்வோம். எங்கள் குலத்துப் பெண்களுக்குக் கற்பும் குணமும்தான் அழகும் ஆபரணமும். உன் தந்தைக்கு என் மகளைக் கலி





யாணம் செய்வதென்று தீர்மானித்த போது மலையமானாடு முழுதும் அல்லோல கல்லோலப்பட்டது. அவ்வளவுக்குத் தமிழகத்துச் சிற்றரசர்கள் எல்லாரும் அசூயை கொண்டார்கள். அதை நான் பொருட்படுத்தவில்லை. மூன்று உலகமும் பிரமிக்கும்படியாக உன் பெற்றோர்களின் திருமணம் தஞ்சையில் நடந்தது. என்றாலும், அப்போது நடந்த கொண்டாட்டத்தைக் காட்டிலும் நீ பிறந்தபோது திருக்கோவலூரில் நடந்த கொண்டாட்டந்தான் அதிக குதூகலமா யிருந்தது. உனக்கு என்ன பெயர் வைப்பது என்பது பற்றிக் குதூகலமான சர்ச்சை நடந்தது. சிலர், உன் குலத்து முன்னோரில் மிகப் புகழ்பெற்ற கரிகால்வளவன் பெயரை இட வேண்டும் என்றார்கள். நானும் இன்னும் சிலரும் உன் பெரிய பாட்டனார் இராஜாதித்யர் பெயரைத்தான் வைக்க வேண்டும் என்று வற்புறுத்தினோம். கடைசியில் இரண்டையும் சேர்த்து

'ஆதித்த கரிகாலன்' என்று உனக்கு நாமகரணம் செய்தார்கள்.

"அதோ பார்! ஆதித்தா! திருநாவலூரின் கோவில் சிகரம் தெரிகிறது. நம்பி ஆரூரர் சுந்தரமூர்த்தி அடிகள் பிறந்த ஸ்தலம் அது. அங்கே, இன்றைக்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் உன் பெரிய பாட்டனார் இராஜாதித்திய சோழர் முகாம் செய்திருந்தார். கதைகளிலும் காவியங்களிலும் வரும் எத்தனையோ வீரர்களைப் பற்றிக் கேட்டறிந்திருக்கிறேன். இந்த வீரத் தமிழகத்தில் எவ்வளவோ வீரர்களைப் பார்த்துமிருக்கிறேன். ஆனால் இராஜாதித்யரைப் போன்ற இன்னொரு வீரரைப் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. போர்க்களத்தில் அவர் போர் செய்வதைப் பார்த்தவர்கள் யாராயிருந்தாலும் அப்படித்தான் சொல்லுவார்கள்.

"ஒரு மாபெரும் சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு வடநாட்டின் மீது படை எடுத்துச் செல்ல அவர் இங்கே ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். இரட்டை மண்டலத்து அரசனாகிய கன்னரதேவனை முறியடித்து, மானியகேடம் என்னும் அவனுடைய தலைநகரைத் தரைமட்டமாக்க வேண்டும் என்று அவர் உறுதி கொண்டிருந்தார். முன்னொரு காலத்தில் பல்லவ குலத்து மாமல்ல சக்கரவர்த்தி வாதாபி நகரை அழித்தது போல், மானியகேட நகரை அடியோடு அழித்தால்தான் இரட்டை மண்டலத்தாரின் கொட்டம் அடங்கும் என்றும், தானும் மாமல்லரைப் போல் புகழ் பெறலாம் என்றும் இராஜாதித்யர் எண்ணினார். அதற்கு வேண்டிய மாபெரும் சைன்யத்தைத் திரட்டுவதென்றால் இலேசான காரியமா? மாமல்லர் ஏழு வருஷ காலம் படை திரட்டியதாகச் சொல்வார்கள். அவ்வளவு காலம் தனக்கு வேண்டியதில்லையென்றும் மூன்று அல்லது நாலு ஆண்டுகள் போதும் என்றும் இராஜாதித்யர் கூறினார். படை திரட்டிச் சேர்ப்பதற்கும், திரட்டிய படைகளுக்குப் போர்ப் பயிற்சி தருவதற்கும் தகுந்த பிரதேசம் இந்தக் கெடிலம் ஆற்றுக்கும் தென் பெண்ணை நதிக்கும் இடைப்பட்ட நாடுதான் என்று தேர்ந்தெடுத்தார்.

"ஆதித்தா! அந்த நாளில் இந்த இரு நதிகளுக்கும் இடையிலுள்ள பிரதேசத்தை நீ பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. அந்தக் காட்சிகளைப் பார்த்தவர்களோ, உயிர் உள்ளவரையில் அதை மறக்க மாட்டார்கள். திருநாவலூரில் இராஜாதித்யர் முப்பதினாயிரம் வீரர்களுடன் தங்கியிருந்தார். பெண்ணையாற்றங்கரையில் உள்ள முடியூரில் சேர நாட்டுச் சிற்றரசன் வெள்ளன் குமரன் இருபதினாயிரம் வீரர்களுடன் முகாம் செய்திருந்தான். உன் பாட்டன் அரிஞ்சயன் என்னுடன் திருக்கோவலூரில் இருந்தான். நானும் அரிஞ்சயனும் ஐம்பதினாயிரம் வீரர்களை ஆயத்தம் செய்தோம். இன்னும் கொடும்பாளூர்ப் பெரிய வேளான், இன்று சோழ நாட்டுக்குச் சனியனாக முளைத்திருக்கும் பழுவேட்டரையன், கடம்பூர் சம்புவரையன், இந்தத் திருமுனைப்பாடி நாட்டின் சிற்றரசனான முனையதரையன், மழநாட்டு மழவரையன், குன்றத்தூர்க் கிழான், வைதும்பராயன் முதலியவர்கள் தத்தம் படைகளுடன் இந்த இரண்டு நதிகளுக்கும் இடையில் தங்கியிருந்தார்கள். யானைப் படைகளும், குதிரைப் படைகளும், தெரிந்த கைக்கோளரின் மூன்று கைப் படைகளும் இங்கே முகாம் போட்டிருந்தன. இப்படித் தங்கியிருந்த படைகளுக்குள்ளே அடிக்கடி பயிற்சிப் போர்கள் நடக்கும். யானைகளோடு யானைகள் மோதும் போது பூகம்பம் வந்து விட்டதாகத் தோன்றும். குதிரைப் படைகளின் அணிவகுப்புகள் வேல் பிடித்த வீரர்களுடன் பாய்ந்து செல்லுங்கால் எழும் சத்தம் பிரளய கால சமுத்திரம் பொங்கி வருவது போலிருக்கும். வீரர்கள் வில்களிலிருந்து அம்புகள் விட்டுப் பழகிக் கொள்ளும் போது அந்தச் சரமாரியினால் வானமே மறைந்துவிடும். எதிரிப் படைகளைத் தாக்குவதற்காக ஆயிரமாயிரம் வீரர்கள் 'நாவலோ நாவல்' என்று ஏககாலத்தில் கர்ஜித்துக் கொண்டு கிளம்பிப் பாயும் போது உலகத்தின் முடிவு நெருங்கி விட்டதாகவே தோன்றும். இதையெல்லாம் வேடிக்கை பார்ப்பதற்குத் திரள் திரளாக ஜனங்கள் வருவார்கள்.

"இந்தத் திருமுனைப்பாடி நாட்டிலும் நடு நாட்டிலும் உள்ள ஜனங்கள் மிக நல்லவர்கள். அதோடு வீரம் மிகுந்தவர்கள். இங்கே படை திரண்டிருந்த போது அவர்களுடைய விவசாயத்துக்குப் பெரும் குந்தகங்கள் நேர்ந்தன. அதையெல்லாம் அவர்கள் பொருட்படுத்தவில்லை. இத்தகைய மக்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்வதற்காகவே இராஜாதித்யர் இந்த இரண்டு நாட்டிலும் பல ஏரிகள் தோண்டுவித்தார். கொள்ளிடத்திலிருந்து புதிய ஆறு வெட்டிக் கொண்டு வந்து வீரநாராயணபுரத்து ஏரியில் தண்ணீர்

நிரப்புவதற்கும் ஏற்பாடு செய்தார். ஆதித்தா! அந்த ஏரியின் வளத்தினால் பெருநன்மை அடைந்தவன் கடம்பூர் சம்புவரையன். அவன் அன்றைக்கு இராஜாதித்யரின் அடிபணிந்து நின்ற நிலையையும் இன்று அடைந்திருக்கும் செல்வச் செருக்கையும் ஒப்பிட்டுப் பார்த்தால் எனக்குப் பெரு வியப்பு உண்டாகிறது!....''

ஆதித்த கரிகாலன் குறுக்கிட்டு, ''தாத்தா! சம்புவரையர் செருக்கைப் பற்றித் தங்களுக்கு என்ன கவலை? தக்கோலத்தில் நடந்த யுத்தத்தைப் பற்றிச் சொல்லுங்கள். இந்தக் கெடிலக் கரையில் திரட்டிய மாபெரும் சைனியம் எப்போது இங்கிருந்து புறப்பட்டது? அவ்வளவு முன்னேற்பாடுகள் செய்திருந்தும், என் பெரிய பாட்டனார் அவ்வளவு பெரிய மகா வீரராயிருந்தும், ஏன் நம் படைகள் தக்கோலத்தில் தோல்வியுற்றன? தாங்களும் அந்தப் போரில் கலந்து போரிட்டவர் அல்லவா? ஆகையால் நேரில் பார்த்துத் தெரிந்து கொண்டிருப்பீர்களே?'' என்றான்.

''ஆம்; நானும் அந்தப் போர்க்களத்தில் இருந்தேன். அதைப் பற்றித்தான் உனக்குச் சொல்லப் போகிறேன்.

''இராஜாதித்யர் இங்கே பல வகைப் படைகள் திரட்டித் தூர தேசங்களுக்குச் சென்று போர் செய்வதற்குப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்தார் அல்லவா? சில காரணங்களினால் உத்தேசித்திருந்த காலத்துக்குள் அவர் புறப்பட முடியவில்லை. இலங்கையில் மறுபடியும் போர் மூண்டதாகச் செய்தி வந்தது. அதை வெற்றிகரமாக முடிப்பதற்கு மேலும் படைகள் அனுப்ப வேண்டியிருந்தது. தெற்கே ஒரு பகைவனை வைத்துக் கொண்டு வடக்கே நெடுந்தூரம் சோழ நாட்டின் முக்கிய சேனா வீரர்களும் தளபதிகளும் போவதைச் சக்கரவர்த்தி விரும்பவில்லை. இலங்கைப் போர் முடிந்ததாகச் செய்தி வந்த பிறகு புறப்படலாம் என்று கூறி வந்தார். இராஜாதித்யரும் தந்தையின் வார்த்தையைத் தட்ட முடியாமல் பொறுமையுடன் காத்திருந்தார். ஆனால் பகைவர்கள் அவ்விதம் காத்திருக்க இணங்கவில்லை. இரட்டை மண்டலச் சக்கரவர்த்தி கன்னரதேவனும் அதேசமயத்தில் சோழ நாட்டின் மீது படையெடுப்பதற்காகப் பெரிய சைன்யம் சேர்த்துக் கொண்டு வந்தான். அந்த மாபெரும் சைன்யத்துடன் அவன் தெற்கு நோக்கிப் புறப்பட்டுவிட்டான். கங்க நாட்டு மன்னன் பூதுகனும் தன் பெரும் படையுடன் கன்னர தேவனோடு சேர்ந்து கொண்டான். வடகடலும் தென் கடலும் ஒன்று சேர்ந்தாற் போல் இரட்டை மண்டல சைன்யமும் கங்க நாட்டுப் பூதுகன் சைன்யமும் சேர்ந்து ஒரு மகா சமுத்திரமாகி முன்னேறி வந்தது. அந்தச் சமுத்திரத்தில் யானைகளாகிற திமிங்கிலங்கள் ஆயிரக் கணக்கிலும் குதிரைகளாகிற மகர மீன்கள் பதினாயிரக்கணக்கிலும் இருந்தன. பிரளய காலத்தில் ஏழு கடலும் சேர்ந்து பொங்குவதுபோல் பொங்கி முன்னேறி வந்த அந்தச் சேனா சமுத்திரம் தென்னாட்டை அடியோடு மூழ்க அடித்து விடும் என்று தோன்றியது. அந்தச் சைன்யத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டு முன்னால் வாயுவேக மனோ வேகமாக ஓடி வந்து அறிவித்த நம் ஒற்றர்கள் அவ்வாறு சொன்னார்கள்.

''ஆனால் இதுவும் ஒருவிதத்தில் நல்லதே என்று பராந்தக சக்கரவர்த்தி கூறினார். நம்முடைய சைன்யங்களைத் தொலை தூரம் பிரயாணம் செய்யப் பண்ணி, பிரயாணக் களைப்புடன் பகைவர்களின் நாட்டில் எதிரி சைன்யத்துடன் போர்புரியச் செய்வதைக் காட்டிலும், எதிரி சைன்யங்களை நமது நாட்டுக்குச் சமீபமாக இழுத்து அவர்களை

நாலாபுறமும் மடக்கி அதம் செய்வது தான் நல்ல போர் முறை என்று சக்கரவர்த்தி கூறினார். எதிரி சைன்யம் வடவேங்கடம் வரை நெருங்கிவிட்டதென்று தெரிந்த பிறகுதான் பிரயாணப்படுவதற்கு அநுமதி கொடுத்தார்.

"அநுமதி கிடைத்ததோ, இல்லையோ. இராஜாதித்யர் புறப்பட்டு விட்டார். மூன்று லட்சம் காலாள் வீரர்களும், ஐம்பதினாயிரம் குதிரை வீரர்களும், பதினாயிரம் போர் யானைகளும், இரண்டாயிரம் ரதங்களும், முந்நூற்றிருபது தளபதிகளும், முப்பத்திரண்டு சிற்றரசர்களும் அப்பெருஞ் சைன்யத்தில் சேர்ந்து சென்றார்கள். அவர்களிலே ஒருவனாகச் செல்லும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. ஆனால் உயிர் பிழைத்துத் திரும்பி வந்த துர்ப்பாக்கியசாலியும் ஆனேன்.

"மூன்று நாள் பிரயாணத்துக்குப் பிறகு காஞ்சிக்கு வடக்கே இரண்டு காத தூரத்தில் தக்கோலம் என்னும் இடத்தில் நம் படைகளும் எதிரிகளின் படைகளும் போர்க்களத்தில் சந்தித்தன!

"ஆதித்தா! புராணங்களில் தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் நடந்த யுத்தம் பற்றிக் கேட்டிருக்கிறோம். இராம ராவண யுத்தம் பற்றியும் பாண்டவ கௌரவர் யுத்தம் பற்றியும் அறிந்திருக்கிறோம். தக்கோலத்தில் நடந்த கோர யுத்தத்தை நேரில் பார்த்தவர்கள் அந்த யுத்தங்கள் எல்லாம் அற்பமானவை என்றே சொல்லுவார்கள். நம்முடைய படைகளைக் காட்டிலும் எதிரிகளின் படைகள் சுமார் இரண்டு மடங்கு அதிகமாயிருந்தன. ஐந்து லட்சம் வீரர்களும் முப்பதினாயிரம் போர் யானைகளும் அச்சைன்யத்தில் இருந்ததாகத் தெரிந்தது. இருந்தால் என்ன? உன்னுடைய பெரிய பாட்டனார் இராஜாதித்யரைப் போன்ற சேநாதிபதி அந்தச் சைனியத்தில் இல்லை. ஆகையால் வீர லக்ஷ்மியும் ஜய லக்ஷ்மியும் நம்முடைய பக்கத்திலேயே இருந்து வருவதாகத் தோன்றியது.

"பத்து நாள் வரையில் யுத்தம் நடந்தது. இரு பக்கத்திலும் இறந்து போன வீரர்களைக் கணக்கு எடுப்பது அசாத்தியமாயிற்று. போர்க்களங்களில் பெரிய குன்றுகளைப் போல் யானைகள் இறந்து விழுந்து கிடந்தன. இரு பக்கத்திலும் சேதம் அதிகமாயிருந்தாலும், எதிரிகளின் கட்சியே விரைவில் பலவீனமடைந்தது. இதற்குக் காரணம் என்னவென்பதை எதிரிகள் கண்டு கொண்டார்கள். புலிக்கொடியைக் கம்பீரமாகப் பறக்கவிட்டுக் கொண்டு இராஜாதித்யரின் யானை போகுமிடமெல்லாம் ஜயலக்ஷ்மியும் தொடர்ந்து போகிறாள் என்பதை அறிந்துகொண்டார்கள். எங்கெங்கே நமது படையில் சோர்வு ஏற்படுகிறதாகத் தென்பட்டதோ, அங்கே இராஜாதித்யரின் யானை போய்ச் சேர்ந்தது. அந்த யானையையும் அதன் மீது வீற்றிருந்த வீர புருஷரையும் பார்த்ததும் நம் வீரர்கள் சோர்வு நீங்கி மும்மடங்கு பலம் பெற்று எதிரிகளைத் தாக்கினார்கள். இதையெல்லாம் பத்து நாளும் கவனித்து வந்த பகைவர்கள் ஒரு படுபாதகமான சூழ்ச்சி செய்தார்கள். அது சூழ்ச்சி என்று பின்னும் தான் தெரிய வந்தது. சூழ்ச்சி செய்தவனும் அதை நிறைவேற்றி வைத்தவனும் கங்க மன்னன் பூதுகன்தான். திடீரென்று அந்தப் பாதகன் தன் யானையின் மீது சமாதானக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டு இரண்டு கைகளையும் தலைக்கு மேல் தூக்கிக் கொண்டு, 'சரணம்! சரணம்!' என்று கூவிக் கொண்டு வந்தான். அச்சமயம் இராஜாதித்யரே சமீபத்தில் இருந்தார். புலிக்கொடி பறந்த அவருடைய யானையின் அம்பாரியைப் பார்த்த பின்னரே பூதுகன் அவ்வாறு செய்திருக்க வேண்டும். மகா வீரராகிய இராஜாதித்யர் இவ்வாறு ஒரு பகை மன்னன் 'சரணாகதி' என்று சொல்லிக் கொண்டு வருவதைப் பார்த்ததும் மனம் இளகி விட்டார். இரட்டை மண்டலச் சக்கரவர்த்தியே போரை நிறுத்திச் சமாதானம் கோருகிறாரா அல்லது அவரைப் பிரிந்து இந்தப் பூதுகன் மட்டும் நம்முடன் சேர வருகிறானா என்று தெரிந்து கொள்ள விரும்பினார். ஆகையால் சங்கநாதம் செய்து தம்மைச் சுற்றி நின்ற மெய்காப்பாளரை விலகச் செய்தார். பூதுகன் ஏறியிருந்த யானையைத் தாம் ஏறியிருந்த யானைக்கு அருகில் வரும்படி சமிக்ஞை செய்தார். பூதுகன் இராஜாதித்யரின் அருகில் வரும் வரையில் கைகூப்பிய வண்ணம் வந்தான். அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகியதையும் இராஜாதித்யர் பார்த்தார். இதனால் அவருடைய மனம் இன்னும் இளகிவிட்டது.

**'தொழுத கையுள்ளும் படை**
**யொடுங்கும். அன்னார்**
**அழுத கண்ணீரும் அனைத்து'**

என்னும் தமிழ் நாட்டுப் பெரும் புலவரின் வாக்கு அச்சமயம் இராஜாதித்யரின் ஞாபகத்தில் இருக்கவில்லை. கண்ணீரைக் கண்டு கரைந்து விட்டார். இன்னும் சமீபமாகப் பூதுகனை வர

விட்டு. 'என்ன சேதி?' என்று கேட்டார். அதற்கு அவன் கூறிய மறுமொழி இராஜாதித்யரை அருவருப்புக் கொள்ளும்படி செய்தது. இரட்டை மண்டலப் படைகளுக்குத் தோல்வி நிச்சயம் என்று தெரிந்து விட்டதால் சரணாகதி அடைந்துவிடும்படி கன்னர தேவனிடம் தான் கூறியதாயும், அவன் அதை மறுத்து விட்டபடியால் தான் மட்டும் தனியே பிரிந்து வந்து சரணாகதி அடையத் தீர்மானித்ததாகவும் பூதுகன் கூறினான். இதைக் கேட்டதும் இராஜாதித்யர் அவனைக் கடுமையாகநிந்தித்தார்.

''அத்தகைய நீசனைத் தாம் தம் கட்சியில் சேர்த்துக் கொள்ள முடியாது என்றும், திரும்பிப் போகும்படியும் கூறிக் கொண்டிருக்கும் போதே, பூதுகன் கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் அந்தப் பயங்கரமான வஞ்சகச் செயலைப் புரிந்து விட்டான். மறைவாக வைத்திருந்த வில்லையும் அம்பையும் எடுத்து வில்லில் நாணேற்றி அம்பைப் பூட்டி எய்துவிட்டான். அந்தக் கொடிய விஷம் தோய்ந்த அம்பு எதிர்பாராத சமயத்தில் இராஜாதித்யரின் மார்பில் பாய்ந்ததும் அவர் சாய்ந்தார். இப்படிப்பட்ட வஞ்சனையை யாரும் எதிர்பார்க்கவில்லையாதலால் சுற்றிலும் நின்ற வீரர்கள் என்ன நேர்ந்தது என்பதையே சிறிது நேரம் தெரிந்து கொள்ள வில்லை. இராஜாதித்யர் பூதுகனைத் திரும்பிப் போகும்படி கட்டளையிட்டது மட்டும் அவர்கள் காதில் விழுந்தது. உடனே பூதுகன் தன் யானையை விரட்டி அடித்துக் கொண்டு ஓடிப் போனான்!

"இராஜாதித்யர் யானை மேலிருந்தபடியே மரணமடைந்தார் என்ற செய்தி பரவியதும் நமது படையைச் சேர்ந்தவர்கள் அனைவருக்கும் தனித்தனியே தலையில் இடி விழுந்ததுபோல் ஆகி விட்டது. அந்த மாபெரும் துயரத்தினால் யுத்தத்தையே மறந்து விட்டார்கள். சிற்றரசர்கள், தளபதிகள், படை வீரர்கள் எல்லாருமே செயல் இழந்து புலம்பத் தொடங்கி விட்டார்கள். அந்த நிலைமையில் பகைவர்களின் கை ஓங்கி விட்டதில் ஆச்சரியம் இல்லையல்லவா! சிறிது நேரத்துக்கெல்லாம் நமது சைனியம் பின் வாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. ஓடுகிறவர்களைத் துரத்துவது எல்லாருக்குமே எளிது தானே? அப்படி ஓடி வந்தவர்களில் நானும் ஒருவன்தான்! இந்தக் கெடில நதிக்கரை வரையிலேகூடப் பகைவர்களின் சைனியம் வந்துவிட்டது. இங்கே வந்த பிறகுதான் நாங்கள் சுய உணர்வு

என்? என்? நண்பனே? 'முரளி'

பல மணிக் கணக்காக
பரவசத்துடன் நீ
கண்ணாடி முன் நின்று
கண் நோக்கிச் சிரிக்கின்றாய்.
பஸ் ஸ்டாண்டை நோக்கித்தான்
பரபரப்புடன் நடக் கின்றாய்;
அரை மணிக்கு அதிகமே
அலுப்பின்றி நிற்கின்றாய்;
கூட்டத்தில் இடிபட்டும்
கூச்சமின்றிச் செல்கின்றாய்;
மதில் போன்று நீண்டிருக்கும்
மனிதர் நிரை நிறைந்திருக்கும்
''க்யூ''வின் கடைசியிலே
கால் கெஞ்சக் காக்கின்றாய்;
டிக்கெட்டுடன் சென்ற பின்னர்
திறந்த வாய் மூடாமல்
நான்கு மணி நேரமும்
நன்றாகப் பார்க்கின்றாய்;
படம் பார்த்து முடிந்த பின்னர்
ஐயகோ என் சொல்வேன்!
என்ன பரபரப்பு
என்ன சுறுசுறுப்பு!
தேசியக் கொடி காணத்!
தேகத்தில் தெம்பிலேயோ
சொல்லொணா அவசரத்தில்
செல்லுவதேன் சொல்லுவாயோ?

பெற்றுத் திரும்பி நின்றோம். பகைவர்களைத் தடுத்து நிறுத்தினோம். நான் திருக்கோவலூரிலிருந்து என் குடும்பத்தாரை அழைத்துக் கொண்டு போய் மேற்கே மலைநாட்டில் இருக்கும் என்னுடைய கோட்டையிலே விட்டேன். அந்த மலைச்சாரலிலேயே படைகளைத் திரட்டினேன். இந்தக் கெடில நதிவரையில் வந்துவிட்ட பகைவர்களை அவ்வப்போது தாக்கிக் கொண்டு வந்தேன். ஆயினும் அப்போது வந்த பகைவர்கள் பல வருஷ காலம் இந்தப் பகுதியை விட்டுப் போகவில்லை. அங்குமிங்கும் தங்கித் தொல்லை கொடுத்துக் கொண்டுதான் இருந்தார்கள். காஞ்சி நகர் அவர்கள் வசத்திலேதான் இருந்தது. மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் நீ வீரபாண்டியனை முறியடித்த பிறகு இந்தப் பக்கம் வந்துதான் காஞ்சி நகரை மீட்டாய்....''

ஆதித்த கரிகாலன் மீண்டும் குறுக்கிட்டு, ''தாத்தா! இதெல்லாம் எனக்கு முன்னமே தெரிந்ததுதான்! ஆனால் தக்கோலப் போரைப் பற்றியும் இராஜாதித்யர் வரலாற்றையும் எத்தனை தடவை கேட்டாலும் எனக்கு அலுப்பதில்லை. இப்போது இராஜாதித்யரைப் பற்றி எனக்கு எதற்காக நினைப்பூட்டினீர்கள்? அதைச் சொல்லுங்கள்!'' என்றான்.

''குழந்தாய்! உன் பெரிய பாட்டனார் இராஜாதித்யர் சோழ சாம்ராஜ்யத்தை இலங்கை முதல் கங்கை நதி வரையில் விஸ்தரிக்க ஆசை கொண்டிருந்தார். அந்த ஆசை நிறைவேறாமலே உயிர் நீத்தார். அவரைப் போன்ற மகா வீரன் என் பேரன் ஆதித்த கரிகாலன் என்று நாடு நகரமெல்லாம் பேச்சாயிருக்கிறது. அவர் சாதிக்க நினைத்த காரியத்தை நீ சாதிக்கப் போகிறாய் என்று இத்தமிழகமெங்கும் ஜனங்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இராஜாதித்யரைப் போல் நீயும் வஞ்சகத்துக்கு ஏமாந்து போகக்கூடாது என்பதற்காகவே அவருடைய வரலாற்றை உனக்கு நினைவூட்டினேன்.....''

''தாத்தா! என் பெரிய பாட்டனார் போர்க்களத்தில் பகைவர்களின் வஞ்சனையினால் உயிரை இழந்தார். அதை இப்போது எனக்கு எதற்காக நினைவூட்டுகிறீர்கள்? நான் போர்க்களத்துக்குப் போகவில்லையே? என்னை வஞ்சிக்கக்கூடிய பகைவர்களின் மத்தியிலும் போகவில்லையே? என் தந்தையின் அத்யந்த நண்பர்களையல்லவா பார்க்கப் போகிறேன்? அவர்கள் என்னை எந்த விதத்தில் எதற்காக வஞ்சிக்கப் போகிறார்கள்?'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''கேளடா, கரிகாலா! எதிரிகள் தொழுத கையிலும் அழுத கண்ணீரிலும் கொடிய ஆயுதம் இருக்கக்கூடும் என்று கூறிய திருவள்ளுவர்பெருமான், வெளிப் பகையைக் காட்டிலும் உட்பகை கொடியது என்றும் கூறியிருக்கிறார்.

**''வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக**
**கேள்போல் பகைவர் தொடர்பு**

''வாளைப் போல் வெளிப்படையாக எதிர்த்து நிற்கும் பகைவர்களிடம் பயம் வேண்டியதில்லை; சிநேகிதர்களைப் போல் நடிக்கும் பகைவர்களிடமே பயப்பட வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். குழந்தாய்! கேளிரைப் போல் நடிக்கும் பகைவர்களின் மத்தியில் இப்போது போகிறாய். நான் வேண்டாம் என்று தடுத்தும் கேளாமல் நீ போகிறாய். ஏதோ ராஜ்யம் சம்பந்தமாகத் தகராறு நேர்ந்து விட்டதாகவும் அதைத் தீர்த்து வைக்கப் போவதாகவும் உன்னை அழைத்திருக்கிறார்கள். சம்புவரையன் மகள் ஒருத்தியை உன் கழுத்தில் கட்டிவிட உத்தேசித்து உன்னை அழைத்திருப்பதாகவும் அறிகிறேன். ஆனால் அவர்களுடைய உண்மையான நோக்கம் இன்னதென்பது எனக்கும் தெரியாது; நீயும் அறிந்திருக்க முடியாது. உனக்குப் பெண் கொடுப்பதற்கு இந்தப் பாரத தேசத்தில் மன்னாதி மன்னர்கள் பலர் காத்திருக்கிறார்கள். இந்தச் சம்புவரையன் மகள்தான் வேண்டும் என்பதில்லை. இராஜ்யத்தை உனக்குப் பாதி என்றும் மதுராந்தகனுக்குப் பாதி என்றும் பிரித்துக் கொடுத்துச் சமாதானம் செய்விக்கப் போகிறார்கள் என்றும் கேள்விப்படுகிறேன். அதில் என்ன சூது இருக்குமோ, சூழ்ச்சி இருக்குமோ எனக்குத் தெரியாது. எது எப்படியானாலும், நான் உடனே திருக்கோவலூருக்குச் சென்று என்னுடைய பாதுகாப்புப் படைகளையெல்லாம் திரட்டிக் கொண்டு வந்து வெள்ளாற்றங்கரையில் தங்கியிருப்பேன். சம்புவரையர் அரண்மனையில் இருக்கும்போது உனக்கு ஏதேனும் சந்தேகம் தோன்றினால் எனக்கு உடனே சொல்லி அனுப்பு!.....''

இச்சமயம் ஆதித்த கரிகாலனுடைய கவனம் தம் பக்கம் இல்லை என்பதையும் வேறு பக்கம் திரும்பியிருக்கிறதென்பதையும் மலையமான் கண்டார்.

''தாத்தா! அதோ பாருங்கள்!'' என்று ஆதித்த கரிகாலன் கலக்கத்துடன் கூறிய வார்த்தைகளை அந்த வீரக் கிழவர் கேட்டு, அந்தத் திசையை உற்று நோக்கினார்.

(தொடரும்)

# ராமாயணம்

## ராஜாஜி



ராஜகுமாரர்கள் கபந்தனை எரித்தார்கள். எரித்ததும் அவன் திவ்வியமங்கள ரூபத்துடன் நெருப்பிலிருந்து வெளி வந்து சுவர்க்கம் செல்ல விமானம் ஏறினான். "நீங்கள் சீதையை அடைவீர்கள். மிகவும் ரம்மியமான பம்பா தீரத்துக்குச் சென்று அங்கே ரிச்யமூக மலையில் வசித்து வரும் சுக்ரீவன் என்ற வானர ராஜாவின் உதவியைப் பெற வேண்டும். அவன் தன் அண்ணனாகிய வாலியால் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டுக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான். அவனுடைய நட்பை நீங்கள் சம்பாதித்தாலொழிய உங்கள் காரியம் நிறைவேறாது" என்று சொல்லி மறைந்தான்.

* * *

பிறகு ராமனும் லக்ஷ்மணனும் பம்பையை நோக்கிச் சென்றார்கள். அந்த அழகிய பிரதேசத்தில் மதங்க ரிஷியின் சிஷ்யையான சபரி என்கிற விருத்த சந்நியாசி அம்மையைக் கண்டு, அவளுடைய உபசாரத்தைப் பெற்றார்கள். சபரியம்மை மகா ஞானி. ராமன் ஈசுவராவதாரம் என்பதை அறிந்தவள். அவன் வருவான், அவனைக் கண்டு அவன் பாதத்தில் வணங்கிப் பரம பதமடைய வேண்டும் என்றே காத்திருந்தாள். ராமனுக்காகத் தான் தேடி வைத்

இருந்த மிருந்த ருசியான பழங்களை அவனுக்கும் லக்ஷ்மணனுக்கும் தந்து உபசரித்தாள்.

பிறகு சபரி அவ்விடத்திய மகிமைகளையெல்லாம் ராமனுக்குக் காட்டியும் சொல்லியும் முடித்தாள். பிறகு தீ எழுப்பி அதில் பிரவேசித்து உடலை நீத்து மேலுலகம் சென்றாள்.

சபரியைக் கண்டு பம்பாசரஸில் ஸ்நானம் செய்தபின் ராமலக்ஷ்மணர்கள் தைரியம் அடைந்தார்கள். பிறகு செய்ய வேண்டியதை யோசித்தார்கள். ''லக்ஷ்மணா! என் உள்ளத்தில் வெற்றியடைவோம் என்கிற உணர்ச்சி தோன்ற ஆரம்பித்திருக்கிறது. சுக்ரீவனைப் பார்க்கும் வழி தேடுவாய்'' என்றான் ராமன்.



பம்பை நோக்கிச் சென்றார்கள். பம்பையாறும் தடாகமும் வனமும் வசந்த பருவத்துக்குரிய அழகோடு சோபித்தன. மிருகங்களும், பறவைகளும், மரங்களும், கொடிகளும் தம்முடைய இயற்கைச் சௌந்தரியத்தைக் காட்டி ராமனுடைய துக்கத்தை முன்னைவிட அதிகமாக வளரச் செய்தன. எதைப் பார்த்தாலும், சீதை இதை எவ்வளவு அநுபவித்திருப்பாள் என்கிற எண்ணமே அவன் உள்ளத்தை வாட்டிற்று. அவதார சங்கற்பத்தின்படி அநுபவிக்க வேண்டிய மானுட துயரத்தை எவ்வளவு அடக்கியாளப் பார்த்தாலும் முடியவில்லை. எப்போதுமே தைரியமும் ஸ்தைரியமும் கொண்ட ராமனுடைய மனம் தளர்ந்து போய்க் கஷ்டப்படுவதைப் பார்த்து லக்ஷ்மணன் ஆறுதல் மொழிகள் சொல்லி வந்தான். ''தேவர்களின் தாயாகிய அதிதியின் கர்ப்பத்தில் மூடி வைத்தாலும் சீதையைக் கண்டு பிடிப்போம். ராவணன் தப்பிப் போக மாட்டான். நிச்சயம், அவனை வதைத்துச் சீதையை மீட்போம். இந்த மனத் தளர்ச்சி உனக்குத் தகாது. கவலையும் அதைரியமும் உன்னை அண்டலாமா? அவற்றைத் தூர விலக்கு. ஒரு பொருளை இழந்தால் அதை மறுபடியும் பெறுவதற்கு மனிதன் இடைவிடாத முயற்சியுடன் வேலைசெய்ய வேண்டும். நம்முடைய அன்பே நமக்கு விரோதியாகப் போகிறது. அன்பினால் மனம் சோகத்தில் சிக்கியலைந்து தளர்ச்சியடைந்து முயற்சியைத் தடுக்கிறது. உனக்கு நான் சொல்ல வேண்டுமா? உற்சாகமே மனிதனுக்கு முக்கிய சாதனம். சோகத்தையும் அதை உண்டாக்கும் அன்பையும் மறந்து உற்சாகத்தை மேற்கொண்டு முயற்சி செய்வோமாக. தைரியம் செய்து கொண்டு சோகத்தைத் தள்ளுவாய், அண்ணா!''

இவ்வாறெல்லாம் தம்பி அண்ணனுக்கு உபதேசம் செய்தான். ஆதிசேஷன் மகா விஷ்ணுவுக்குக் காப்பு. அந்த ஆதிசேஷனைப் போல் இளையபெருமாள் சக்கரவர்த்தித் திருமகனை உற்சாகப்படுத்தி மனத் தாழ்ச்சியை விலக்கினான் என்பது பெரியோர்களுடைய வியாக்கியானம்.

*   *   *

ராமன் ரிச்யமூக வனம் வந்து இங்குமங்கும் வில் பிடித்துத் திரிவதைப் பார்த்துச் சுக்ரீவனுக்கும் அவன் கூட்டத்துக்கும் பெரும் பயம் பிடித்துக்




கொண்டது. வாலியால் துரத்தியடிக்கப்பட்ட சுக்ரீவன், வாலி வர முடியாத இடம் என்று கண்டு அந்த மலைப் பிரதேசத்தில் வாசம் செய்து கொண்டிருந்தான். இங்கும் வாலி மாறு வேடம் போட்டுக் கொண்டு தன்னைக் கொல்ல வந்து விட்டானோ என்று சுக்ரீவன் பயந்தான். அல்லது வாலியினுடைய நண்பர்கள் க்ஷத்திரிய வீரர்கள் யாரோ அவன் சார்பில் வந்து தன்னைக் கொல்லப் பார்க்கிறார்கள் என்றும் பயந்தான். வனத்தில் உள்ள மற்ற வானரர்களும் கிலி பிடித்து இங்குமங்கும் ஓடினர்.

ஹனுமான் சுக்ரீவனுடைய முக்கிய மந்திரி. அவன் சுக்ரீவனுக்குத் தைரியம் கூறினான். ''இது வாலியல்ல. இவர்கள் வாலியின் நண்பர்களாகவும் காணப்படவில்லை. பயப்பட வேண்டிய காரணமில்லை. நான் போய்ப் பேசித் தெரிந்து கொண்டு வருகிறேன்'' என்று சொன்னதன் பேரில் சுக்ரீவன் மிக மகிழ்ச்சியடைந்து, ''அப்படியே செய்! ஜாக்கிரதையாகப் போய் விஷயத்தைத் தெரிந்து கொண்டு வா. மிகச் சாமர்த்தியமாக உண்மையை உணர வேண்டும். எனக்கு மிக சந்தேகமாகத்தான் இருக்கிறது. அவர்கள் இங்குமங்கும் தேடுவதைப் பார்த்தால் என்னைக் கண்டு பிடித்துக் கொல்லவே வந்திருப்பதாகத் தோன்றுகிறது'' என்றான்.

ஹனுமான் ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடம் ஒரு பிராமண வடிவமெடுத்துச் சென்றான். போய் நின்றதுமே ஹனுமானுடைய உள்ளத்தில் ஒரு புது உணர்ச்சி உண்டானதாகத் தெரிகிறது. உள்ளதை உள்ளது போல் சொல்லிப் பேசலானான். நிகழ்ச்சியை எழுதும் போது தான் யார் என்பதைக் காட்டாமல் விஷயம் கண்டு கொள்ளவே போனதாக முனிவர் ஆரம்பிக்கிறார். ஆனால், போகப் போக ஒன்றும் மறைக்காமல் தன்னைப் பற்றியும் வானர ராஜனைப் பற்றியும் விவரமாகப் பேசுகிறான். ராம லக்ஷ்மணர்களுடைய தோற்றத்தைக் கண்டதும் தூதனைக் கண்ட பக்தனைப் போல் பரவசப்பட்டு அநுபவித்துப் புகழ்கிறான். தான் ஒரு வானரம் என்றும், தன்னுடைய அரசன் சொல்லிய வண்ணம் வேஷம் போட்டுக் கொண்டு வந்ததாகவும் சொல்லி விடுகிறான்.

'' மனத்தைக் கவரும் ரூபம் தரித்த ராஜ ரிஷிகளே! தேவர்களைப் போல் விளங்குகிறீர்கள். விரதம் பூண்டவர்களாகக் காணப்படுகிறீர்கள். தவம் செய்ய வந்தீர்கள் என்றே எண்ணுகிறேன். இந்தக் கஷ்டமான வனத்துக்கு ஏன் வந்தீர்கள்? நீங்கள் யார் என்று சொல்ல வேண்டும். இந்த நதியும் வனமும் உங்கள் வரவால் முன்னை விட அழகாக விளங்குகின்றன. உங்களுடைய முக காந்தியும் உங்கள் சரீர சௌந்தரியமும் ஆச்சரியமாக விளங்குகின்றன. உங்களுடைய அபூர்வ லக்ஷணங்களைக் கண்டு இந்த வனத்திலுள்ள ஜீவன்கள் பயப்படுகின்றன. உங்கள் பராக்கிரமம் சொல்லாமலே விளங்குகிறது. நீங்கள் யார் ? எந்தத் தேசத்திலிருந்து வந்திருக்கிறீர்கள்? நீங்கள் பெரிய ராஜ்யத்தை ஆட்சி புரியவே பிறந்தவர்கள் என்பது வியக்தம். ஆயினும் ஜடையும், மரவுரியும் தரித்து வில்லும் அம்புமாக வந்திருக்கிறீர்கள்.

'' நான் இவ்வளவு சொல்லியும் ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்? இங்கே சுக்ரீவன் என்கிற வானர ராஜன் தன் அண்ணன் வாலியால் நாட்டிலிருந்து துரத்தப்பட்டு இங்குமங்கும் அலைந்தும், மறைந்தும் காலம் கழித்து வருகிறான். அவனுடைய மந்திரி நான். என் பெயர் ஹனுமான். நான் வாயுவின் புத்திரன். அரசன் உத்தரவிட்டபடி பிராமண சந்நியாசி உருவம் தரித்து உங்களிடம் வந்திருக்கிறேன்.''

இவ்வாறு ஹனுமான் மிக வணக்கமாகச் சொன்ன மொழிகளைக் கேட்டு ராமன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான்:

''தம்பி, இந்த ஹனுமான் பேசியதைக் கேட்டு இவனிடம் எனக்கு முழு நம்பிக்கை உண்டாயிருக்கிறது. அவன் பேச்சின் அழகைப் பார்த்தாயா? எவ்வளவு சரியான இலக்கணமும் சுரமுமாகப் பேசுகிறான்! வேதங்கள் முழுதும் அத்தியயனம் செய்து, வியாகரணம் சம்பூரணமாகக் கற்றவனைப் போல் பேசுகிறான். இவனைப் போல் அல்லவோ இருக்க வேண்டும் தூதன். இத்தகைய தூதனைக் கொண்ட அரசனுக்கு ஒரு குறையுமில்லை. நாம் யாரைத் தேடி வந்தோமோ அவனே நம்மைத் தேடி வந்திருக்கிறான். சுக்ரீவனைக் காண நாம் வந்தோம். அவனே இந்தத் தூதனை அனுப்பியிருக்கிறான். இவனுக்கு நல்வரவு சொல்லி நம் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பாய்.''

(தொடரும்)





# பழைய பேப்பரில் புதிய பொருள்கள்!

எழுதத்தான் பயன்படும் என்று நாம் எண்ணிக்கொண்டிருக்கும் காகிதத்தால், விந்தைகள் பல புரிய முடியும் என்று சமீபத்தில் அமெரிக்காவில் நடந்த கண்காட்சி ஒன்றில் நிரூபித்திருக்கிறார்கள். காகிதத்தால் செய்யப்பட்ட 400க்கும் மேற்பட்ட பல வகைப் பொருள்கள் வைக்கப்பட்டிருந்த கண்காட்சியில் காகிதத்தால் செய்யப்பட்ட மேஜை, நாற்காலிகள், சுவர்கள், கூரைகள் போன்றவை பலரைப் பிரமிப்பில் ஆழ்த்தினவாம். காகிதத்தால் செய்யப்பட்ட பொருட்கள் கண்ணைப் பறிக்கும் பலவித வர்ணங்களிலும் விலை குறைவாகவும், ஓர் இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு எளிதில் எடுத்துச் செல்லக் கூடியவையாகவும் இருக்கின்றன. நீண்ட நாட்கள் உழைக்கவும் செய்கின்றன. பக்கத்தில் காணப்படும் மூன்று புகைப் படங்களும் காகிதத்தால் ஆன மூன்று வெவ்வேறு பொருட்களே.



(1) குழந்தைகளுக்குப் பின்னால் இருக்கும் வீடுகள் முழுக்க முழுக்கப் பேப்பரால் ஆனவை. கலிபோர்னியாவில் கட்டப்பட்டிருக்கும் இக்குடியிருப்புக்களில் நீர் ஒழுகாது; தீப்பிடிக்காது.

(2) பேப்பரினால் ஆடையும் தயாரிக்கலாம்! படத்தில் உள்ள பெண்மணி அணிந்து கொண்டிருப்பது காகிதத்தால் செய்த ஆடையே!

(3) காகிதத்திலிருந்து தயாரிக்கப்படும் ஓடுகள். கூரை வேயவோ தரையில் பதிக்கவோ சுவரெழுப்பவோகூட உபயோகப்படுத்தலாம். -திருச்சி ஜி. எஸ்.

புகைப்படங்கள் உதவி: அமெரிக்கத் தகவல் நிலையம்

# முன்னேற்றத்துக்கு வழி

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்



சிறப்புக்குரிய நம் நாடு சீக்கிரமாக முன்னேற்றம் அடைய வேண்டும் என்பது நம் எல்லோருடைய ஆசை. முக்கியமாக இது சுதந்திரச் செய்தியைக் கேட்டு மட்டற்ற மகிழ்ச்சி அனுபவிக்கும் நம் குழந்தைகளின் ஆசை. இந்த ஆசை பூர்த்தியாவதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி என் நிச்சயமான முடிவை இந்தக் கட்டுரையில் சொல்லுகிறேன்.

முன்னேற்றத்தின் ரகசியம் நல்வாழ்க்கை. நல் வாழ்க்கையின்றி மற்ற முயற்சிகளும், சாதனங்களும் பயனற்றுப் போகும். இதைப் பற்றிச் சந்தேகமே வேண்டாம். தவிர, வேறு எந்த முறை இருந்த போதிலும் நாட்டு மக்களின் பூரண நல்வாழ்க்கை ஒன்றே போதும்: மிகப் பெரிய சிறப்பைத் தரும்.

நல் வாழ்க்கை தனி மக்களின் கையிலிருக்கிறது. அரசாங்கத்தின் கையிலில்லை. அரசாங்கம் தனி மக்களின் முயற்சிக்கு உதவி செய்ய முடியுமே யொழிய, சட்டங்களையும் அதிகாரத்தையும் கொண்டு மக்களை நல் வாழ்க்கையில் பலாத்காரமாகப் புகுத்த முடியாது.

பயன்படும் வாழ்க்கைக்கு வேண்டியது ஊக்கம், கற்பனை, அறிவு, அன்பு. இந்த நான்கு குணங்களும் மக்கள் உள்ளத்தில் பாதுகாக்கப்பட்டு வந்தால் மக்களின் தனி வாழ்க்கையும், சமூக வாழ்க்கையும் உன்னத நிலை அடையும்.

ஒவ்வொருவனும் தான் செய்யும் தொழிலில் ஊக்கம் கொண்டு உழைக்க வேண்டும். கற்பனா சக்தியை உபயோகித்து வேலை செய்ய வேண்டும். மனிதனுக்கும், யந்திரத்துக்கும் முக்கியமான வித்தியாசம் மனிதனுடைய கற்பனா சக்தியே. சாமர்த்தியசாலிக்கும், மற்றவர்களுக்கும் கற்பனா சக்தி படைத்திருப்பதும் இல்லாததுமே வித்தியாசம். கற்பனா சக்தியை ஆங்கிலத்தில் 'இமாஜினேஷன்' என்பார்கள். இந்த 'இமாஜினேஷ'னே ஆக்கவினைகட்கு மூலம். கற்பனைச் சக்தியை அப்பியாசத்தின் வழி வளர்க்க முடியும். பயிற்சியில்லாமற் போனால் எதுவும் செத்துப் போகும்.

கற்பனை வேகம், பயன் தரக்கூடிய முறையில் சென்றால் மனிதனுக்கு ஊக்கம் தரும். பயனற்ற வழிகளில் சென்றால் கற்பனையானது வீண் மனோராஜ்யமாகும். கற்பனா சக்தியையும் சிந்தனையையும் பயனற்ற விஷயங்களிலும் முறைகளிலும் செலுத்தினால் சோம்பலும், தூக்கமும் வளரும்.

நமக்குள்ள மனோசக்தியைப் பயனற்ற துறைகளில் செலுத்தாமல் தடுத்துக் கொள்ள வேண்டும். சித்தத்தைப் பயன் தரும் வேறு துறைகளில் செலுத்துவதே இதற்கு வழி. ஏதேனும் நல்ல காரியங்களில் மனத்தைச் செலுத்தினால் பயனற்ற சிந்தனைக்கு இடமிருக்காது. அவ்வாறின்றி, ''வீட்டைக் காலியாக'' வைத்துக் கொள்ளப் பார்ப்பது



விளைவும். சுத்த சமாதி நிலை சாதாரண ஜனங்களுக்கு எட்டாது. எந்த நிலையிலுள்ளவர்களுக்கும் உள்ளத்தைச் செலுத்த வேண்டிய நல்ல விஷயங்கள் ஏராளமாயிருக்கின்றன. பயனற்ற மனோ வேகங்களை நீக்கி வேறு விஷயங்களில் மனத்தைச் செலுத்துவது அரிதல்ல, எளிதாகும். குறளாசிரியர் பயனில்லாத பேச்சைக் கண்டித்துத் தம்முடைய நூலில் ஒரு தனி அதிகாரம் அமைத்தார். பேச்சேயின்றிப் பயனற்ற கற்பனைக்கும், பயனற்ற சிந்தனைக்கும் அறநூல்களில் அதிகாரங்கள் தந்து கண்டித்தல் தகும். மனம் என்பது கெட்ட குரங்கு. அது சும்மா இருக்காது. தூங்கும் போதுங்கூட அது சேஷ்டை செய்து கொண்டேயிருக்கப் பார்க்கும். மனோ வேகங்கள் அவ்வளவும் ஒரேயடியாகத் தூக்கத்தில் அமர்வதில்லை. குறைவு பட்ட தூக்கத்தில் ஏற்படும் குரங்குச் சிந்தனைகளும், கற்பனைகளுமே கனவுகளாகின்றன. அவற்றைக் கொண்டு வருங்கால சுக துக்கங்களையாவது வேறு எந்த உண்மைகளையாவது காணப் பார்ப்பது சுத்த அறியாமை.

பயனற்ற சிந்தனைகளை விலக்குவதற்கு உபாயம் மேலே சொன்ன வழி ஒன்றே. மூளைக்கு வேலை கொடுத்துக் கொண்டேயிருக்க வேண்டும். அதைச் சும்மா விடக் கூடாது. சுத்த வாழ்க்கையின் ரகசியம் இதுவே.

மனோ ராஜ்யமாகாத கற்பனையானது பொன் போன்ற செல்வம். குழந்தை நடக்கக் கற்பதைக் கவனித்தால் நடப்பதின் மூலப் பாகுபாட்டைக் காணலாம். முன் கால் எடுத்து வைத்ததும் உடல் முன்னால் சாய்கிறது. உடனே பின் அடி எடுத்து வைத்து விழாமல் தடுத்துக் கொள்வதே நிமிர்ந்து நின்று நடப்பதின் ரகசியம். மானிட முன்னேற்றமும் இவ்வாறே நடைபெறுகிறது. முன்சென்று விழப் போவதும், அதைப் பகுத்தறிவு கொண்டு தடுத்துக் கொள்வதுமே முன்னேற்றத்தின் ரகசியம். முன் எடுத்து வைக்கும் காலைப் போன்றது கற்பனை. எந்த ஆக்க வினையிலும் முதலில் கற்பனை வேகம் வேலை செய்ய வேண்டும். பிறகு பின் காலாகிய பகுத்தறிவு உதவிக்கு வந்து நிற்க வேண்டும். கற்பனையும், பகுத்தறிவும் இரு கால்களைப் போல் தொடர்ந்து சென்றால் முன்னேற்றம் உண்டாகும். கற்பனையின்றி வெறும் பகுத்தறிவு மட்டும் இருந்தால் போதாது. நின்ற இடத்தில் நிற்போம். முன்னேற்றம் வேண்டுமானால் பிழை செய்யும் துணிவு வேண்டும். பிழையைக் கண்டு கொண்டு அதை அகற்றும் வழி தேடுவதற்காகப் பகுத்தறிவும் கூடவே இருக்க வேண்டும். இல்லாவிடில் கற்பனையானது நம்மைப் பள்ளத்தில் கொண்டு போய்த் தள்ளி விடும்.

* * *

தான் கண்ட கற்பனையிலும், தான் செய்த சிந்தனையிலும் ஒவ்வொருவனுக்கும் ஓர் இயற்கைப் பற்று ஏற்படுகிறது. உண்மைக்கும் நன்மைக்கும் மாறுபட்டிருந்தாலும் 'எனது' என்கிற அந்தப் பற்று அவனைப் பிடித்துக் கொண்டு பகுத்தறிவை மயக்குகிறது. இதுவே அறிந்தோரை ஏமாற்றும் பெரிய பகை. தான் பெற்ற குழந்தைகளிடம்



தாய்க்குள்ள அன்பைப் போல் தாம் பெற்ற கற்பனை, தாம் செய்து தீர்த்த சோதனை, இவற்றில் அறிவு படைத்தவர்களுக்குங்கூட ஓர் இயற்கைப் பசை ஏற்பட்டு வரம்பு மீறவும் பார்க்கிறது.

பற்று அல்லது அபிமானம் இருப்பதாலே தான் குழந்தைகளுக்காகப் பெற்றோர்கள் பாடுபடுவதும் தியாகம் செய்வதும். அதைப் போலவே ஒவ்வொருவனுக்கும் தான் கண்ட உண்மையில் பற்று ஏற்படுவதால் விடா முயற்சியுடன், எதிர்ப்புகளினாலும் தடைகளினாலும் தளர்ச்சி உண்டாகாமல், மக்களின் முன்னேற்றத்துக்கு வேண்டிய இன்றியமையாத வினைகளில் மனிதன் ஈடுபடுகிறான். ஆனால் அந்த அபிமானம் பகுத்தறிவுக்கு அடங்கி நிற்க வேண்டும். 'என் மகன், என் மகனே, அவன் திருடனானாலும் மோசக்காரனானாலும் அவனை விடமாட்டேன், நானும் அவனுடன் செல்வேன்' என்பது குற்றமாகும். அவ்வாறே கற்பனையிலும் சிந்தனையிலும் 'எனது' என்கிற பற்றைப் பிடித்துக் கொண்டு அர்த்தமற்ற மூர்க்கம் செய்தலும் குற்றமாகும். தான் வாதித்த அரசியல் கொள்கை, தான் போதித்த தருமம் அல்லது சம்பிரதாயம், தான் ஏற்படுத்திய பள்ளிக்கூடம் அல்லது போதனை முறை, தான் ஆரம்பித்த ஒரு காரியம் இவ்விதமான அகங்காரங்கள் எல்லாமே பகுத்தறிவை மீறினால் பெருங் குற்றமாகும்.

பற்றுக்கள் இல்லாமலிருக்க முடியாது. பற்றுக்கள் இல்லா விடில் குடும்பமில்லை, குழந்தையில்லை, அன்பு இல்லை, முயற்சி இல்லை. ஆனால் வரம்பு மீறக் கூடாது. அந்த வரம்பே பகுத்தறிவு. பகுத்தறிவு இருந்தால் அடக்கமும் நிதானமும் அவற்றின் பயனாக வெற்றியும் பெறுவோம்.

* * *

பூதப் பிரபஞ்சம் ஒரு பேரற்புத நியதிக்குட்பட்டு நிற்கிறது. கடவுளுக்கு மக்கள் பல பாஷைகளில் பல பெயரிட்டிருக்கிறார்கள். அனைத்தையும் கடந்து நிற்கும் பொருளுக்கு அதாவது அறிவுக்கு அப்பால் நிற்கும் தத்துவத்துக்கு, தமிழ்ப் பெரியோர் 'கடவுள்' என்று பெயர் வைத்தார்கள். ஆண்பாலும் பெண்பாலும் அல்லாத இந்த எகர ஈற்று மொழியே அறிவைக் கடந்த பரம்பொருளைக் குறிக்கும் பல சொற்களுள் பொருட் செறிவும், வடிவழகும், தெளிவும், சுருங்கிய உருவமும் கொண்ட சிறந்த மொழி. எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நின்று வேலை செய்து உலகத்தைத் தாங்கி வரும் நியதித் தொகுதியில் ஒரு பகுதியைப் பௌதிக விஞ்ஞானப் புலவர்கள் சோதித்து விளக்கி வந்திருக்கிறார்கள். ஒரு நீர்த் துளி முதல் பூமண்டலத்தைப் போன்ற பெருங் கட்டிப் பொருள் வரையிலும், அதற்கு அப்பாலுள்ள எல்லாக் கோளங்களும் அதனதன் உருவத்தோடு நின்று நிலைத்திருப்பதற்குக் காரணம் அணுக்கள் ஒன்றோடொன்று ஒட்டி நிற்கும் இயல்பு. ஆங்கிலத்தில் இந்த சர்வ வியாபகமான பிண்ட சக்திக்குக் 'கொஹீஷன்' என்று பெயரிட்டிருக்கிறார்கள். பிண்ட சக்தி ஒழிந்து போனால் கல்லும் பொடியாய்ப் போகும்; நாம் வசிக்கும் வீடுகள் தரையோடு தரையாகப் போகும்; தனி உருவம் என்பதே இல்லாமல் சமஸ்த பொருளும் மலை, காடு, எல்லாமே பொடியாகி ஒரு பெருந் தூசிக் கடலாக வடிந்து போகும்.

பொருள்களின் வடிவ நிலைக்குக் காரணமான பிண்ட சக்தியைப் போலவே சிதறிக் கிடக்கும் கோளங்கள் அனைத்தையும் தத்தம் மண்டல ஸ்தானங்களில் நிறுத்தி வரும் சர்வ வியாபகமான சக்தி ஒன்று உண்டு. இடைவெளி விட்டுப் பிரிந்து நிற்கும் பொருள்கள் எல்லாம் ஒன்றை ஒன்று இழுத்துப் பிடித்து நிற்கின்றன. ஒரு புற் சுமையைக் கயிற்று வலையில் போட்டு இறுகக் கட்டினாற் போல் உலகம் முழுதும் சிதறிப் போகாமல் ஒரு பெருஞ் சக்தியினால் பிணைக்கப்பட்டு நிற்கின்றது. சர்வதா சுழன்று சுழன்று அலைந்து கொண்டிருக்கும் எண்ணற்ற மண்டலங்கள் அனைத்தும், தத்தம் வட்டத்துக்குள் வட்டமிட்டுக் கொண்டு ஆனால் வரம்பு மீறாமல் ஒன்றையொன்று இழுத்துப் பிடித்துக் கொண்டு நிலைத்து நிற்கின்றன. உலகம் யாவற்றிலும் வேலை செய்யும் இந்தப் பரஸ்பர கவர்ச்சி வேகத்துக்கு ஆங்கிலத்தில் 'க்ராவிடேஷன்' என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

நாம் கையாளும் பொருள்களுக்கும் பூமிக்கும் உள்ள கவர்ச்சியே பொருள்களின் கனமாக நாம் உணர்கிறோம். எல்லாப் பொருள்களும் தரையை நோக்கி விழப் பார்க்கின்றன அல்லவா? இந்தியாவில் பொருள்கள் தரையை நோக்கி விழுவதைப் போலவே, அமெரிக்காவிலும் அதே சமயத்தில் பொருள்கள் அமெரிக்கத் தரையை நோக்கி, இந்தியாவில் விழும் திசைக்கு நேர் எதிரிடை திசையில் பாய்கின்றன. இந்தக் கண்டத்தில் பொருள்கள் விழுவதும், அமெரிக்காவில் விழுவதும் நேர் எதிரிடை கதி. காந்தத்தை நோக்கி இரும்புப் பொடி எல்லாத் திசையிலிருந்தும் செல்கின்ற விதமே பொருள்கள் உருண்டை வடிவமான பூமியை நோக்கிச் செல்கின்றன. இந்தக் கவர்ச்சிச் சக்தியைத் தடுப்பதால் உண்டாகும் உணர்ச்சியே பொருள்களின் 'பாரம்'.

ஆகவே, எல்லாப் பொருள்களுக்குள்ளும் பரஸ்பர கவர்ச்சிச் சக்தி மறைந்து நிற்கிறது. இது பல தோற்றத்துடன் தன்னைக் காட்டிக் கொள்கிறது. பூதப் பொருள்களின் பரஸ்பர கவர்ச்சியைப் பராசக்தியின் ஓர் உருவமாகவே ஆராதிக்கலாம். எங்கும் பரவி நிற்கும் பௌதிக ஆகர்ஷணம் கடவுளின் ஓர் அர்ச்சாவதாரம் என்று வைதிக முறையில் சொல்லத் தகும்.

* * *

பௌதிகப் பொருள்களில் பரந்து வேலை செய்யும் இணைப்பைப் போலவே ஆன்மாக்கள் அனைத்துள்ளும் ஒரு பரஸ்பர கவர்ச்சிச் சக்தி நின்று வேலை செய்கிறது. ஒவ்வொரு பூத அணுவும் மற்ற அணுக்களை இழுத்துக் கொண்டிருப்பதைப் போல், ஒவ்வோர் ஆன்மாவும் மற்ற ஆன்மாக்களோடு பிணைக்கப்பட்டிருக்கிறது. உயிருள்ள உலகம் சிதறிப் போகாமலிருப்பதற்கு இதுவே காரணம். அகில ஆன்மக் கவர்ச்சியும் 'க்ராவிடேஷன்'

என்கிற பூதக் கவர்ச்சியைப் போலவே ஒரு பேருண்மை. அது நிலைக்குத் தகுந்தவாறு தோற்றம் காட்டுகிறது. இந்தக் கவர்ச்சியே அன்பு.

குழந்தைக்கும் பெற்றோருக்குமுள்ள பற்றின் ரகசியத்தை நாம் முழுதும் கண்டோமா? இல்லை. மக்களிடை தோன்றும் நட்பின் ரகசியத்தைக் கண்டோமா? இல்லை. அகில ஆன்மக் கவர்ச்சியும் பராசக்தியின் ஓர் அர்ச்சாவதாரமாகும். உயிர்களில் காணும் கூட்டுறவும் ஸ்திரீ புருஷத் தொடர்பும், சமூகப் பற்றும், தேச பக்தியும் இவ்வேறான்ன பல கவர்ச்சிகளும் இந்த அன்பு என்கிற வேகத்தில் அடங்கும். கிராவிடேஷனைப் போலவே அன்பு நியதியும் விசுவப் பரப்பு கொண்டது. உலகம் முழுதும் அன்பு என்கிற சக்தியால் கட்டுண்டு நிற்கிறது. ஒன்றிலிருந்து உண்டான பலவும் மறுபடியும் ஒன்றாகச் சேர இடைவிடாமல் விரும்புகின்றன! அதுவே பலவித 'பற்று'க்களாகவும் கவர்ச்சிகளாகவும் தோற்றம் காட்டுகிறது. பௌதிகப் பொருள்களின் கனத்தைப் போலவே தடுக்கப்பட்ட அன்பு சக்தியானது சுகம், துக்கம், துவேஷம் இவை போன்ற பல மனோ நிலைகளாகத் தோற்றம் கொள்கிறது.

* * *

அன்பின் பெருமையையும், அதன் கடவுள் தன்மையையும் உணர்ந்து அதையும் அதன் வடிவில் ஈசனையும் ஆராதித்து நடப்பது ஞானம். ஊக்கம், கற்பனைச் சக்தி, அறிவு, அன்பு இவற்றை யெல்லாம் நாம் படைத்துப் பாடுபட்டாலும் ஆண்டவன் அருளும் வேண்டும். அதுவன்றி ஒரு பயனும் பெறமாட்டோம். நல்வழியில் நின்றோமானால் ஈசனுடைய அருளும் பெருகும்: வானம் பொழியும் மாரி போல் தானாகப் பெய்யும்.

நல்வாழ்க்கைக்கு ஊக்கம், கற்பனா சக்தி, அறிவு, அன்பு இவற்றை வளர்க்க வேண்டும் என்று சொன்னேனே யொழிய பொய், மோசம், திருட்டு இவை கூடாது என்று சொல்லவில்லை. உலகத்தில் சிலர் இருந்து கொண்டே இருப்பார்கள்; பொய்யரும், மோசக்காரரும், திருடரும் இல்லாமல் சமூகத்தை முற்றிலும் சுத்த சத்துவ சமூகமாகச் செய்ய ஒரு நாளும் முடியாது. ஆனால், பெரும்பாலோர் அறிவும் அன்பும் படைத்து ஊக்கத்தோடும், நல்ல கற்பனைச் சக்தியைச் செலுத்தியும் பாடுபட்டு வந்தால் சமூகம் மிக உன்னதச் சிறப்பு எய்தும். பொய்யும் திருட்டும் தாமாகவே வெட்கப்பட்டு மறைந்து கொள்ளும்.

நம்புங்கள். நம்பி நிழலில் நில்லுங்கள். மனிதன் புத்தி எப்போதும் 'கடவுள் உண்டு. கடவுள் எங்கே?' என்று சந்தேகத்தில் ஊசலாடிக் கொண்டே யிருக்கும். மரத்தடியில் நிழல். அப்பால் உயிரைக் காயும் வெயில். நிழலில் நில்லுங்கள்; வீணில் வெய்யிலில் அடிபட வேண்டாம். சின்ன விஷயங்களுக்கு அத்தாட்சி உண்டு; பிரமாணம் கிடைக்கும். பேருண்மைகளுக்குச் சாட்சியும் இல்லை; பிரமாணமும் கிடைக்காது. பொய்யென்று உறுதி கூறுவாரும் இல்லை. நம்புங்கள், நம்பி




தேய்ந்து போன பழைய இசைத் தட்டுகளை வெற்றிலை பாக்குத் தட்டுகளாக உருமாற்ற வேண்டாம். காலாவதியான பழைய இசைத் தட்டுகளுக்கும் சிகிச்சை அளித்துப் 'புத்துயிர்' ஊட்டும் முறையை மேற்கு ஜெர்மனியில் 75 வயதான டாக்டர் ஹென்ரிச் சான்டிரின் கண்டு பிடித்துள்ளார். இவர் கண்டுபிடித்துள்ள புதுமையான - ஆனால் சிக்கலான இயந்திரத்தில் பழைய இசைத் தட்டுகளைப் பொருத்தி 'மருத்துவம்' செய்யப்படுகின்றது. இதன் பின்னர், அந்தப் பழங்கால இசைத்தட்டுகள், ''கீச்சுக் குர''லில் பாடாமல் ''கணீர்'' என்று கம்பீரமான குரலில் பாடுகின்றன. - பூ.பி.எஸ்.

நிழலில் நில்லுங்கள். வீணாக வெயிலில் காய்ந்து சாக வேண்டாம்.

கடவுள் உண்டு; அன்பு உண்டு. உய்யும் வழி அவனை நோக்கிச் செல்வது. சுற்றமுள்ளவர்கள் நலமே என் நலம் என்று எப்போதும் அன்பு செய்து, அன்பு எண்ணி, அன்பு பேசி வாழ்க்கையை நடத்துவதுதான் முன்னேற்றத்துக்கு வழி.

**[' சிந்தனை ' 1949ம் ஆண்டு மலரில் சிந்தனைக்கு விருந்தளிக்கும் இந்தக் கட்டுரையை வெளியிட்டிருக்கிறார்கள். இக்கட்டுரையைக் ' குமரி மலர் ' 1970 ஏப்ரல் இதழில் மறுபடியும் பிரசுரித்திருக்கிறார்கள். கல்கி வாசகர்களுக்குப் பயன்படட்டும் என்று இக்கட்டுரையை மற்றொரு முறை தருவதில் பெருமிதம் அடைகிறோம். — ஆசிரியர்]**



# காணக் கிடைக்காத தங்கம்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் பத்து

**பா**த்திரம் காலியா யிற்று. அரை வயிற்றுச் சோறுதான். எனினும், அருணகிரியின் முகத்தில் இருந்த பசிக் களைப்பு மறைந்து, திருப்திக் களை நிலவியது. உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது. இலேசாக ஓர் ஏப்பமும் விட்டான்.

இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த அந்தப் பெண்ணின் அழகு வதனத்தில் பெருமிதம் பொங்கி வழிந்தது. புன்முறுவலுடன் பாத்திரங்களைக் கழுவி அடுக்குவதில் கவனமானாள்.

அருணகிரி குழாயடிக்குப் போய்த் தண்ணீர் பருகிக் கையையும் வாயையும் கழுவிக் கொண்டு திரும்பி வந்தான். இதற்குள் அவள் கூடையைத் தூக்கித் தலை மேல் சுமந்து கொண்டு அங்கிருந்து புறப்படத் தயாரானாள்.

''நீ சாப்பிடலியே?'' என்று தயக்கத்துடன் கேட்டான் அருணகிரி.

'நான் சாப்பிட்டாகி விட்டது' என்பது போல் இளநகை பூத்தாள் அவள்.

''இன்னைக்கு நான் நரி முகத்தில் முழிச்சேன்னு நினைக்கிறேன்!''

''நானும்தான்...''

''இருக்காது.''

''ஏனும்?''

''பசி வேளையிலே வாய்க்கு ருசியான சோறு கிடைத்த அதிர்ஷ்டத்தை நான் சொல்றேன்; உனக்கு அப்படி ஒன்னுமில்லியே!''

''இருக்குது.''

''நஷ்டம்னு சொல்றயா?''

''ஆமாம்; நஷ்டத்திலே லாபம்!''

''என்னது?''

''உங்க தலை!'' என்று வெடுக்கெனச் சொல்லிக் களுக்கெனச் சிரித்தாள் அவள்.

ஆழ்கடலில் மூழ்கி முத்துச் சிப்பிகளை அள்ளி வரும் போது கவனப் பிசகாக ஒரு பெரிய ஆணி முத்தைக் கை நழுவ விட்டு விட்டாற் போன்ற திகைப்புடன் அவளைத் திருதிருவெனப் பார்த்தான் அருணகிரி.

''அப்ப, நான் வர்றேன்'' என்ற வாறு ஓடி எடுத்து வைத்தாள் அவள்.

திடுமென்று எதையோ நினைத்துக்கொண்டவன் போல் அவசரமாக நிமிர்ந்து, ''அதோ, அந்தச் சைக்கிள் ரிப்பேர்க் கடையில்தான் நான் வேலை செய்யறேன்'' என்றான் அருணகிரி.

''தெரியுமே எனக்கு!'' என்றாள் அவள் குறும்புக் குரலில்.

''எப்படித் தெரியும்?''

''தெரிஞ்சுக்கணும்னு நினைச்சேன்; நேத்திக்கே தெரிஞ்சுக்கிட்டேன்!''

அருணகிரிக்கு ஆச்சரியம் எல்லை கடந்து போயிற்று. கண்களை அகல மலர்த்தியபடி அவளை விழுங்கி விடுவது போல் பார்த்தான். அவள் அங்கிருந்து மெல்ல நடக்கத் தொடங்கினாள்.

''ஒரு விஷயம்...''

அவள் சட்டென்று நின்று அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

''உன் பேரு என்னன்னு சொல்லலியே?....''

''எதுக்கு?''

''சும்மாத்தான் கேட்கிறேன்.''

நாணத்தின் செம்மை படரக் குறுநகை புரிந்த அவள், சற்றுத் தொலைவிலிருந்த ஒரு கனகாம்பர மலர்ச் செடியைக் காட்டி, ''அதுதான் என் பேரு'' என்றாள்.

''ஓ, ... கனகாம்பரமா?''

''ஊஹூம்!'' என்று தலையாட்டிவிட்டு நடந்த அவள், ''அம்பரத்தைக் கிள்ளிப் போட்டுடணும்'' என்று சிரிப்புக்கிடையே சொல்லிக் கொண்டு விரைந்து நடக்கலானாள்.

அருணகிரி அப்படியே அடித்து வைத்த சிலையாக நின்றான். அவனுடைய வாய் கற்கண்டைக் குதப்பிச் சுவைப்பது போல், ''கனகம்!... கனகா!....'' என மெல்ல முனகியது.

மணி இரண்டு ஆகி விடவே, பள்ளி மாணவர்கள் கும்பல் கும்பலாகத் தத்தம் வகுப்பை நோக்கி ஓடினர். அருணகிரியும் தன் சைக்கிள் கடைக்கு 'ராஜ நடை' போட்டுச் சென்றான்.

**ஏ**ழுமலைக்கு உள்ளூற ஆச்சரியம்! பையனுக்குச் சோறு கொடுக்காமல் வயிற்றைக் காயப் போட்டான்

திமிர் அடங்கித் தன்னிடம் காசு கேட்டுக் குழைவான் என்றும், அப்போது நன்றாகத் திட்டிப் பயமுறுத்தி, 'இரவு எட்டு மணி வரை கடையில் வேலை பார்த்தால்தான் இனி மதியச் சாப்பாடு கிடைக்கும்' என்று சொல்ல வேண்டும் என்றும் திட்டமிட்டுக் கொண்டிருந்தான். அருணகிரி எங்கோ போய் ரொம்பக் குஷியாகத் திரும்பி வந்து உற்சாகமாக வேலை செய்வதைக் கண்டு அவனுக்குக் கொஞ்ச நேரம் ஒன்றுமே புரியாமல் போயிற்று. பிறகு, 'சரிதான் பையன் கையிலே காசு இருந்திருக்கும். டீக்கடைக்குப் போய் மசால் வடை தின்றுவிட்டு வந்திருப்பான். நாளைக்குப் பார்த்துக் கொள்கிறேன்' என்று தனக்குள் கறுவிக் கொண்டான்.

மாலை மணி நாலரை இருக்கும்.

அருணகிரி பழுது பார்த்துக் கொண்டிருந்த ஒரு சைக்கிளின் 'ஹாண்டில் பாரில்' சிறிதளவு 'பற்ற வைப்பு' வேலை செய்ய வேண்டியிருந்தது. அதற்கான வசதி இந்தக் கடையில் கிடையாது. எனவே, அதைத் தனியாகக் கழற்றி எடுத்துக் கொண்டு, ''ஏம்பா! இதிலே கொஞ்சம் வெல்டிங் பண்ணணும்; மொய்தீன் பட்டறைக்குப் போய் வரட்டுமா ?'' என்று கேட்டான்.

''ஊம்! ஊம்!'' என்று எரிச்சலுடன் சொன்ன ஏழுமலை, ''டேய், சோமாறி! போனேன் வந்தேன்னு வரணும் ! அங்கே அரப்பு அடிச்சுக்கிட்டு நேரங் கழிச்சு வந்தே.... ஆமாம், சொல்லிப்பிட்டேன்!'' என்று கோபமாக எச்சரித்தான்.

''ஆகட்டும்பா!'' என்று அமைதியாகக் கூறிய அருணகிரி ஒரு சைக்கிளில் ஏறிப் புறப்பட்டான்.

அந்தப் பார்சி கோயில் திருப்பத்தில் அவன் திரும்பியபோது அங்கே மதில் சுவர் ஓரமாகச் சைக்கிளுடன் செல்லத்துரை நின்று கொண்டிருப்பதைக் கண்டு வியப்பு அடைந்தான். சட்டென்று தன் சைக்கிளை விட்டுக் கீழே இறங்கி அவனை நோக்கிச் சென்றான்.

அவன் வந்ததைச் செல்லத்துரை கவனிக்கவில்லை. எதிர்ப்புறம் இருந்த பெண்கள் உயர்நிலைப் பள்ளி வாசல் பக்கமே அவனுடைய பார்வை லயித்திருந்தது. அப்போது அந்தப் பள்ளியிலிருந்து மாணவிகள் கும்பல் கும்பலாக வெளியேறிக் கொண்டிருந்தனர். கார்களும், ஸ்கூட்டர்களும், சைக்கிள்களும் அமளிதுமளிப்பட்டுக் கொண்டிருந்தது.

இந்த நேரத்தில் செல்லத்துரை இங்கே ஏன் வந்திருக்கிறான்? இன்று அவன் கல்லூரிக்குப் போகவில்லையா ?



போயிருந்தால் இச்சமயம் இவ்விடத்துக்கு வர முடியாதே! யாரையோ எதிர்பார்த்துக்கொண்டு நிற்பவன்போல் அல்லவா நிற்கிறான்? யாராவது தன் நண்பர்களைப் பார்க்க வந்திருப்பானோ? இது பெண்கள் படிக்கும் பள்ளியாயிற்றே! அவனுடைய தங்கைமார் எவளும்கூட இந்தப் பள்ளியில் படிக்க வில்லையே!'

இப்படியெல்லாம் தனக்குள் கேள்விகளை எழுப்பியவாறு சைக்கிளைத் தள்ளிக்கொண்டு வந்து நின்ற அருணகிரி ஒரு நேச நெருக்கமான புன்னகையுடன், ''என்ன, செல்லத்துரை! எங்கே இப்படி..... இந்த நேரத்தில்?'' என்றான்.

திடுக்குற்றுத் திரும்பிய செல்லத்துரை அவனைத் திருதிருவென விழித்துப் பார்த்து விட்டு உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''என்னப்பா, எங்கே போறே?'' என்றான் அமர்த்தலாக.






## காதல் செஸ்!

1454ம் வருடம் பீருல்போவும் வியரீயும்-இரு வீரச் சிங்கங்கள் நகர கவர்னரின் அழகான பெண் விலோனூராவின் மீது காதல் கொண்டனர். விலோனூராவின் கரம் பற்றும் போட்டியில் இவ்விரு வீரச் சிங்கங்களும் மோதிக் கஷ்டப்படக் கூடாது என்று கவர்னர் கவலைப்பட்டார். அதோடு அவருக்கு மணமாகாத ஒரு சகோதரியும் இருந்தாள். கவர்னர் ஒரு பந்தயம் வைத்தார். யார் செஸ் ஆட்டத்தில் மற்றவரைத் தோற்கடிக்கிறாரோ அவருக்கே விலோனூரா உரியவள் என்று கூறினார். தோல்வியடைந்தவர் தம் சகோதரியை மணக்கலாம் என்றும் தெரிவித்தார். இந்த விசித்திரப் போட்டி யாருடைய கவனத்தையும் கவர்ந்தது. இரு வீரச் சிங்கங்கள் செஸ் போட்டியில் விளையாடுகையில் கவர்னர் நடு மைதானத்தில் உள்ள மிகப் பிரும்மாண்டமான செஸ் போர்டில் உயிருள்ள மனிதர்களையே செஸ் காய்களாக வைத்து நகரச் சொன்னார்.

அன்று முதல் அந்த இத்தாலிய நகரத்தில் உயிருள்ள மனிதர்களையே செஸ் காய்களாகப் பயன்படுத்துவது ஒரு பரம்பரைப் பழக்கமாகிவிட்டது. முடிவு எப்போதும் இன்பகரமாகவே இருக்கும். சமீபத்தில்கூட ஒரு குடிமகனும், ஒரு மெக்கானிக்கும் செஸ் போட்டியில் சந்தித்தனர். தோட்டத்தில் பணிப் பெண்ணாகச் சேவை செய்யும் ஓர் அழகியை மணப்பதற்காகப் போட்டி நடைபெற்றது. பாரம்பரியப் பழக்கம் இத்தாலிய மக்களை இன்னும் விடவில்லை.

—குன்றிமணி

---

"இந்த பாரைக் கொஞ்சம் வெல்டிங் பண்ண வேண்டி இருக்குது; மொய்தீன் பட்டறைக்குப் போறேன்" என்று அருணகிரி உற்சாகமாகச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே செல்லத்துரை தன் சைக்கிளுடன் சற்றுத் தள்ளிப் போய் நின்று கொண்டு, "ஓகோ!" என்றான் எங்கோ பார்த்தவாறு.

எப்போதும் அவன் 'டிப்டாப்'பாக உடை உடுத்திக் கொண்டிருப்பான் என்றாலும் இன் - அவனுடைய ஆடை அலங்காரம், தலை வாரல், முக ஒப்பனை எல்லாமே மிக மிகக் கவர்ச்சியுடன் விளங்கின. இப்படி விளங்க வேண்டும் என்பதில் அவன் விசேஷ கவனம் செலுத்தியிருக்கிறான் என்றும் தோன்றியது. ஆனால் அருணகிரியோ அழுக்கேறிய காக்கிச் சராயும், கிழிந்த அரைக் கைப் பனியனுமாக ஓர் அசல் மெக்கானிக் போல் காட்சியளித்தான்.

"எங்கே... இப்படி... இந்த நேரத்திலே?.... யாரையாச்சும் பார்க்கணுமா?" என்று மீண்டும் நட்புரிமை கலந்த புன்னகையுடன் கேட்டுக் கொண்டே செல்லத்துரையிடம் நெருங்கிப் போனான் அருணகிரி.

அவனைப் பார்க்காமலே மறுபடியும் ஓர் ஐந்தாறடி முன்னால் தள்ளிப் போய் நின்று கொண்ட செல்லத்துரை, 'ஆம்' என்பது போல் தலையை மட்டும் ஆட்டினான்.

அவனுடைய போக்கைக் கண்ட அருணகிரிக்கு உள்ளூற வியப்பாயிருந்தது. 'நேற்று ரொம்ப ரொம்ப நெருக்கமாகத் தோள் மேல் கை போட்டுக் கொண்டு அன்பும் பண்புமாகப் பேசிய இவனா இன்று இப்படி அறிமுகமில்லாத மாதிரி நடந்து கொள்கிறான்?' என்று எண்ணிக் குழப்பமடைந்தான். ஆனாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் புன்சிரிப்புடன், "என்ன துரை! நேத்திக்கு நடந்த விஷயமா நீ ஒன்னுமே கேட்கலியே?" என்றான்.

'என்ன?' என்பது போல் புருவங்களை உயர்த்தி அவனைப் பார்த்தான் செல்லத்துரை.

"அதாவது, நேத்து நீ கொடுத்த லெட்டரை அந்த இஞ்சினியர் வீட்டிலே கொடுக்கப் போனேன், இல்லையா?"

"ஆமாம்; கொடுத்து விட்டாய் அல்லவா?"

"கொடுத்துட்டேன்."

"சரி சரி; நீ இப்போ உன் வேலையைப் போய்க் கவனி! அப்புறம் பேசிக் கொள்ளலாம்!" என்று அலட்சியமாகச் சொல்லிக் கொண்டே மேலும் சற்று முன்னால் போய் நின்று கொண்டான் செல்லத்துரை.

அருணகிரிக்கு மிகவும் வெட்கமாகி விட்டது. அவமானத்தால் முகம் கறுத்துச் சிறுத்தது. "அப்ப சரி, பிரதர்! நான் வரேன்!" என்று அசட்டுச் சிரிப்புடன் சொல்லிக் கொண்டே தலையைத் தொங்கப் போட்டபடி சைக்கிளில் ஏறிப் புறப்பட்டான் அருணகிரி.

'என்ன ஆச்சரியம்! நேற்று அவனே என்னிடம் வலிய வந்து பேசினான்; இன்று முகத்தில் அடித்து விரட்டுவது போல் ஒதுங்கிப் போய் விட்டானே! இதற்கெல்லாம் காரணம் என்ன? ஏழைமைக் கோலத்தில் இருக்கும் என்னோடு நடு ரோட்டில், பட்டப் பகலில் நின்று நாலு பேர் பார்க்கப் பேசிக் கொண்டிருப்பது அகௌரவம், அசிங்கம் என்று எண்ணி அப்படி நடந்து கொண்டானா? இதை முன்கூட்டியே யோசிக்காமல் அசடு போல் பல் இளித்துக் கொண்டு அவனிடம் பேசப்

போனது எவ்வளவு பெரிய பைத்தியக்காரத்தனம்! என்ன இருந்தாலும் அவன் என் கடை முதலாளியின் மகன் அல்லவா? நானோ அவனுடைய அப்பனிடம் கைகட்டி வேலை பார்க்கும் கூலி! ஏதோ, நேற்று அந்தக் கடிதத்தை நான் கொண்டு போய் உரிய இடத்தில் சேர்க்க வேண்டும் என்ற ஒரு காரிய சாதனைக்காக அவன் என்னிடம் வந்து கொஞ்சம் நெருங்கிப் பேசியிருப்பான்; அதில் மயங்கி அவனை எனக்குச் சமதையாகவும், நண்பனாகவும் பாவித்துக் கொண்டு அவனிடம் நான் இப்போது பேசப் போனது பைத்தியக்காரத்தனம்தானே?'

மதியப் பொழுதுக்குப் பின் ஏற்பட்டிருந்த உற்சாக மகிழ்ச்சியெல்லாம் போன இடம் தெரியாமல் மறைந்து போக, பெரிதும் சோர்ந்து துவண்டு விட்டான் அருணகிரி.

ஹாண்டில் பாரை வெல்டிங் பண்ணி எடுத்துக் கொண்டு திரும்பி வருவதற்குள் மணி ஆறாகி விடவே மேற்கொண்டு வேலையில் இறங்காமல் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பி விட்டான்.

ஏழுமலைக்குப் படு ஆத்திரம், கோபம்! ஆனாலும் அவனைத் தட்டிக் கேட்கத் தைரியம் இல்லை. தன் கோபம் தீர வாய்க்குள்ளாகவே ஏதேதோ திட்டி முனகிக் கொண்டான் அவன்.

அன்றிரவும் வழக்கம் போல் வீடு அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. ஆனால் ரத்தினவேலு சட்டிப் பானைகளைத் தூக்கிப் போட்டு உடைக்கவில்லை. தம் பிள்ளைகளில் மூத்த பையனை இழுத்துப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு அவனுக்குச் சரித்திர பாடம் கற்பித்துக் கொண்டிருந்தார். 'அக்பர் சீனாவின் மேல் படையெடுத்தார்' என்று அவர் சொல்ல, 'இல்லேப்பா, சித்தூர் மேல் படையெடுத்தார்' என்று பையன் மறுப்புத் தெரிவிக்க, 'படவா ராஸ்கல்! நான் சொல்றேன், கேட்க மாட்டேங்கிறியா?' என்று பையனின் முதுகில் அவர் 'தபால் தொபீல்' என அடிக்க, பையன் ஓவென்று அலறி அழ, வீடு ஒரே அல்லோல கல்லோலப்பட்டுக் கொண்டிருந்தது. இந்த அமர்க்களத்தைக் கண்டு பயந்து போன மற்றப் பிள்ளைகள் மூலைக்கொன்றாய்ப் பதுங்கிக் கொண்டனர். இதையெல்லாம் பார்த்தும் பாராதவளாய்ச் சமையல் வேலையில் வெகு மும்முரமாய் ஈடுபட்டிருந்தாள் முத்தம்மா.

பூனைபோல் வீட்டில் வந்து நுழைந்த அருணகிரி தன் அத்தாளின் இன்றைய 'சுமாரான' நிலையைப் புரிந்து கொண்டு சற்றே மன நிம்மதி அடைந்தவனாய் வழக்கம்போல் அலமாரிக்குப் பின்னால் போய் உட்கார்ந்து கொண்டான்.

சமையல் வேலை முடிந்தது. கணவனுக்கும் பிள்ளைகளுக்கும் சாப்பாடு போட்டு வைத்துவிட்டு

## இவர்களில் அசல் ஹிட்லர் யார்?











(விடை 32ம் பக்கம் பார்க்கவும்)

அவர்களில் யாருமே ஹிட்லர் அல்ல. அவரைப் போல் தோற்றம் கொண்டவர்கள் அவர்கள்.

நன்றி: பேஜண்ட்

தகவல்: முத்து

வாசலில் போய்க் குந்திக் கொண்டாள் முத்தம்மா. உள்ளே இருந்தால் தன் கணவர் 'உப்பில்லே, காரமில்லே' என்று எதையாவது சொல்லி வீண் வம்புக்கு இழுப்பார் என்பதனாலேயே அவள் அவ்வாறு சென்றாள்.

ஆனாலும் ரத்தினவேலு, "என்னடீ இது குழம்பு, குதிரைக்கு வைக்கிற கொள்ளுத் தண்ணி மாதிரி? நானெல்லாம் உழைச்சுட்டு வருகிற புருஷனுக்கு ஆக்கிப் போடற சோறு இது? இரு இரு. ஒரு நாளைக்கு உன்னைச் செமப்புடி புடிச்சுட்டுப் போய்ப் பெட்ரோலைக் குடிச்சுடறேன்; அப்பத்தான் நீ சரிப்பட்டு வருவே!" என்றெல்லாம் வாய்க்கு வந்தபடி உளறித் திட்டிக் கொண்டே சாப்பிட்டு விட்டு எழுந்து கட்டிலில் தடுமாறிச் சாய்ந்தார். அடுத்த ஐந்து நிமிடங்களுக்கெல்லாம் அந்த வீடே அதிரும்படியான குறட்டைச் சத்தம் எழலாயிற்று. பிள்ளைகளும் சாப்பிட்டு முடித்த கையோடு அங்கங்கேயே படுத்துத் தூங்க ஆரம்பித்தனர்.

மெல்ல உள்ளே வந்த முத்தம்மா, சாப்பிட்டுப் போட்டிருந்த தட்டங்களை எடுத்துக் கழுவி வைத்து விட்டுப் பிள்ளைகளை ஒவ்வொருவராகத் தூக்கிப் பாயில் வரிசையாகக் கிடத்தினாள். பிறகு அருணகிரிக்கு உணவு படைத்தாள். அவன் சாப்பிட்டு எழுந்ததும் அவளும் சமையலறையிலேயே உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டு வந்து பிள்ளைகளின் நடுவில் படுத்துக் கொண்டாள்.

இன்று ஏனோ அவள் தன் தம்பியிடம் மட்டுமல்லாது வேறு யாரிடமும் வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசவில்லை. எதைப் பற்றியோ ஆழ்ந்து சிந்திப்பவளாகத் தோன்றியது. இப்போது தூங்குகிறாளா, விழித்துக் கொண்டிருக்கிறாளா என்றும் தெரியவில்லை.

அவளுடைய உப்புச் சப்பற்ற வாழ்க்கையை நினைக்க நினைக்க அருணகிரிக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. இந்தத் துயரத்தில் மூழ்கியவனைச் சற்று நேரம் இருட்டில் உட்கார்ந்திருந்து விட்டுத் தன்னை ஒருவாறு தேற்றிக் கொண்டு, தன் பாடப் புத்தகத்தில் ஆழ்ந்தான்.

இரவு மணி மூன்றாகியது. அதற்கு மேலும் அவனால் கண் விழித்துக் கொண்டிருக்க முடியவில்லை. அரிக்கன் விளக்கை அணைத்து விட்டுப் படுத்தான்; உடனே தூங்கியும் போனான்.

விடியற்காலை நாலரை மணி இருக்கும். தன் தலைமாட்டில் ஏதோ பேச்சுக் குரல் கேட்டுத் திடுமெனக் கண் விழித்தான் அருணகிரி. அவனுடைய அத்தானும் அக்காவும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் பேசுவதைக் காது கொடுத்துக் கேட்க முதலில் அவனுக்குக் கொஞ்சம் தயக்கமாய் இருந்தது. பிறகு அந்தப் பேச்சுக் குரலில் சற்றுக் கடுமை கலந்திருக்கவே, 'சரி; இது குடும்ப விஷயம் பற்றிய பேச்சுத்தான், கேட்கலாம்' என்ற முடிவுடன் ஆடாமல் அசையாமல் படுத்தவாறு தன் செவிப் புலனைக் கூர்மையாக்கிக் கொண்டான்.

"நீங்க இப்படி மக்கார் பண்ணுவீங்கன்னு எனக்குத் தெரியுமே!"—இது முத்தம்மா.

"பின்னே என்னடீ? நாமெல்லாம் அங்கே போய்க் குடித்தனம் பண்ண முடியுமா? வேணுமானால் நீயும், உன் பிள்ளைகளும், தம்பியும் போய் இருந்துக்குங்க. நான் வரமாட்டேன்."— இது ரத்தினவேலு.

"அப்போ, நீங்க எங்கே இருப்பீங்களாம்? பிளாட்பாரத்திலா?"

"இல்லே; சுடுகாட்டிலே!"

"இருப்பீங்களே! குடிச்சுட்டா உங்களுக்குக் காடும் மேடும் ஒண்ணு தானே?" என்று சொல்லி நகைத்தாள் முத்தம்மா.

அட, முத்தம்மாவும் சிரிக்கிறாளே! அருணகிரிக்கு ஒரே ஆச்சரியம். மேலும் கூர்ந்து கேட்டான்.

"எதுக்கு இப்படி வீண் விதண்டாவாதம் பண்றீங்க?" என்று சிணுங்கலான குரலில் வினவினாள் முத்தம்மா.

"அது என்னமோ எனக்குச் சரியாகப் படலே, அவ்வளவுதான் சொல்வேன்."

"நீங்க ஏன் இப்படிச்சொல்றீங்கன்னு எனக்குத் தெரியும்!"

"என்னடீ தெரியும்?"

"இங்கே இந்த டெஞ்சனலே இருந்தால் தினமும் குடிச்சுட்டு வந்து இஷ்டத்துக்கும் கூத்தடிக்கலாம்; அங்கே போனால் அப்படிப் பண்ண முடியாது. அதுதானே?"

ரத்தினவேலு மெல்லச் சிரித்தார். குழந்தைத்தனமான கோணங்கிச் சிரிப்பு அது.

(தொடரும்)

## 33

அஹிம்சையின் சக்தி, அதாவது அன்பின் சக்தி மிகப் பெரிது. வேறு எதற்கும் அந்த அளவு சக்தி இல்லை. ஆனால் இந்தச் சக்திக்குப் படாடோபம் உதவாது. ஆரவாரம், வேஷம், விளம்பரம் இவற்றுக்கு இதில் இடமில்லை. தன்னம்பிக்கைதான் இதன் அடிப்படை. உள்ளத்தில் தன்னம்பிக்கை உண்டாவதற்கு உள்ளத்தில் பரிசுத்தம் இருக்க வேண்டும். உள்ளத்தை ஒருவன் களங்கமறக் காப்பாற்றிக் கொண்டால், அவனுடைய சுத்தமும் தைரியமும் பிறருடைய உள்ளத்தையும் சுத்தப்படுத்தும். அவனிடம் சேரும் மக்கள் அனைவரும் உள்ளத் தூய்மை அடைவார்கள். சூழ்நிலை முழுதுமே துப்புரவடையும்.

[யங் இந்தியா 6–9–26]

தன்னுயிரும் பிற உயிரும் ஒன்றே என்கிற உணர்ச்சியை அடைவதற்கு முதலில் மனத்தில் தூய்மை வேண்டும். உள்ளம் துப்புரவாக இல்லாமற் போனால் அஹிம்சை என்பது வெறும் கனவேயாகும். உள்ளத்தில் மாசு வைத்திருப்பவன் ஆண்டவனைக் காணமாட்டான். எல்லாக் காரியங்களிலும் தூய்மை இருக்க வேண்டும். தன் உள்ளத்தைத் தான் சுத்தப்படுத்திக் கொண்டால் சூழ்நிலை தானாகவே சுத்தப்படும்.

எப்படிச் சுத்தத்தை அடைவது ? எளிதல்ல. கஷ்டமான காரியமே. மனம், வாக்கு, செயல் மூன்றிலும் ஆசையாவது துவேஷமாவது இருக்கக் கூடாது. விருப்பு வெறுப்பு என்கிற இரண்டு வேகங்களையும் எதிர்த்துச் செல்ல வேண்டும். கருத்து, பேச்சு, செயல் இம்மூன்றும் பூரண பரிசுத்தத்தை அடைவதற்காக நான் இடைவிடா முயற்சி செய்து வருகிறேன். என் முயற்சி இன்னும் பூரண வெற்றி அடையவில்லை. இந்த நிலையில் எல்லாரும் என்னைப் புகழ்ந்து பேசுகிறார்கள். அது எனக்கு மகிழ்ச்சி தரவில்லை; கஷ்டம்தான் தருகிறது. படையெடுத்து விரோதிகளை வென்று, ராஜ்யம் சம்பாதிப்பதைக் காட்டிலும் நம்மை உள்ளே தாக்கும் விருப்பு வெறுப்புகளை வென்று சாந்தி நிலை அடைவது அதிக கஷ்டமான காரியம்.

[சுயசரிதம்]

முயற்சியை விட்டுவிடக் கூடாது. தோல்வி என்று எண்ணி இந்த யுத்தத்தில் பின்வாங்கக் கூடாது. ஒரு தோல்வி ஏற்பட்டால் 'இனிமேல் உள்ளத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வேன்' என்று சங்கற்பம் செய்து கொண்டு, 'உன் கட்டளைப்படி' என்று ஆண்டவனுக்கு விட்டுவிட வேண்டும். அகங்காரம் கொண்டவனுடைய பிரார்த்தனையைப் பகவான் ஏற்றுக் கொள்ள மாட்டான். அவனிடம் வியாபாரம் செல்லாது. எந்தவிதமான வியாபாரமும் செல்லாது. பயமின்றி, சந்தேகமின்றி அவனை அணுக வேண்டும். தீனனாக அணுக வேண்டும். ''நான் நீசன், என்னைக் கைவிடாதே'' என்று தைரியத்துடன் அணுக வேண்டும். அவனுக்கு அனைவரும் சமம். லட்சக்கணக்கான பக்தர்களுக்கு அவன் அருள் காட்டியிருக்கிறான். உனக்கும் அருள்வான். பெரும் பாபம் செய்தவனுக்கும் ''நீயே கதி'' என்று பிரார்த்தித்தால் அருள்வான். என்னுடைய சொந்த அநுபவத்திலிருந்து இதைச் சொல்லுகிறேன். நரக வேதனையில் நான் அவன் அருளை அடைந்திருக்கிறேன். அவனுடைய அருளைப் பெற்றால் அனைத்தும் பெறுவோம். [யங் இந்தியா 4–4–29]



# நட்சத்திரங்கள் பாராட்டிய கலைஞர்கள்

சத்யா ஸ்டுடியோ அன்று வண்ண வண்ண விளக்குகளும், வண்ண வண்ண நீரூற்றுக்களும், வண்ண வண்ண விளக்குத் தோரணங்களுமாய் விழாக் கோலம் பூண்டிருந்தது. தமிழ் நாட்டுத் திரையுலக நட்சத்திரங்களின் ஜொலிப்பு வேறு யாவரையும் கவர்ந்தது.

25-5-70 அன்று சென்னை சத்யா ஸ்டுடியோவில், பூனா திரைப்படக் கல்லூரி மாணவர்கள் நால்வர் தங்கள் திறமையை அதியற்புதமாக வெளிப் படுத்தினார்கள். எல்லோரும் இளைஞர்கள்; ஆனால் கலைஞர்கள்.

முதல் நிகழ்ச்சி, "கயிறு இழுப்புப் போட்டி" கயிறும் கிடையாது; அதை இழுப்பாரும் கிடையாது! ஆனால் இரு கோஷ்டிகளுக்கும் இடையே பலமான கயிறு இழுபறிப் போட்டி நடப்பதைப் போலவும், அதில் ஒரு கோஷ்டி வெற்றி பெறுவதைப் போலவும் ஒரு பாவனை: அதாவது ஓர் இளங்கலைஞர் மேடையில் தோன்றித் தாம் ஒருவரே சில நிமிஷ நேரத்தில் மேற் கூறிய பாவனைக் காட்சியைத் தத்ரூபமாக நிகழ்த்திக் காட்டினார்.

அடுத்தது, "காதலனைக் காணச் செல்லும் காரிகையின் ஒப்பனை" இதிலும் அதே இளைஞர் தோன்றி, கூந்தல் இல்லாமல், தைலம் இல்லாமல் வெறும் பாவனையிலேயே கூந்தலுக்கு எண்ணெயிட்டு, வாரிக் கொண்டை போட்டு, கொண்டை ஊசி குத்திக் கொண்டார்; மேக்கப் சாதனங்கள் எதுவும் இன்றி முகத்தை அழகுபடுத்தி, கண்ணாடியின்றி அதைச் சரி பார்த்துக் கொண்டார்; இந்தக் காட்சியின்போது சினிமா நட்சத்திரங்களுக்கிடையே பலத்த ஆரவாரமும், கையொலியும் கிளம்பின.

அடுத்தது, "பயில்வானும் அவரது உதவியாளரும்" என்பது. அதே இளைஞர் கம்பீரமான பயில்வானாகவும் வந்து அவரது தோஸ்தான உதவியாளனாகவும் வந்து ரசிகப் பெருமக்களின் ஓயாத கையொலியைப் பெற்றார். இந்த மூன்று மௌன நாடகங்களும் பதினைந்து நிமிஷங்களில் நிகழ்ந்து விட்டன. இந்த நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றவர் கன்வார் பெயின்டல் என்பவர்.

இறுதியாக "நடிகர்-இயக்குநர்" என்ற திரையுலக நடைமுறை நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு இருபது நிமிஷ நேரத்தில் நடைபெற்ற ஒரு நகைச்சுவைச் சிறு நாடகம்.

இதில் இயக்குநர், தயாரிப்பாளர், நடிகர், 'காக்கா' என்ற நான்கு பாத்திரங்கள். வயிறு குலுங்கச் சிரிக்க வைத்த நிகழ்ச்சி இதுதான். ராணுவத்திலிருந்து திரும்பிய கதாநாயகன் தன் தாயாரிடம் போர்க்களத்தில் தந்தை இறந்த செய்தியைச் சொல்லுகிறான்; தாயார் மூர்ச்சையாகிறாள்; கதாநாயகன் இந்தச் செய்தியை டாக்டருக்கு டெலிபோன் மூலம் தெரிவிக்கிறான். இந்தச் சிறு நிகழ்ச்சியை வைத்துக் கொண்டு சபையினரை இருபதே நிமிஷத்தில் எத்தனை சிரிக்கவைக்க முடியுமோ அத்தனை சிரிக்கவைத்து விட்டனர். 'காக்கா' என்ற பாத்திரம் கதாநாயகனைக் 'காக்கா' பிடித்தே கையொலி பெற்றுவிட்டார். பங்கு பற்றியவர்கள் அஸ்ரானி, கன்வார் பெயின்டல், சுபாஷ்கார், சுரேஷ் சத்வால்.

இந்த நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவர், புரட்சி நடிகர் எம். ஜி. ஆர். அவர் இளங் கலைஞர்கள் நால்வருக்கும் தங்கச் சங்கிலிகளும், சந்தன மாலைகளும் பரிசாக அளித்துக் கௌரவித்தார். தலைமை தாங்கிய முதல் அமைச்சர் திரு மு. கருணாநிதி கலைஞர்களைப் பாராட்டிப் பேசினார். பூனா மாணவக் கலைஞர்களின் சார்பில், அஸ்ரானி அகமகிழ்வும், முக மலர்ச்சியும் கொண்டு எம். ஜி. ஆருக்கும், அமைச்சர்களுக்கும் நன்றி தெரிவித்தார்.

— காந்தன்



1. தமிழக முதல்வரிடம் பூனா திரைப் படக் கல்லூரி மாணவர் பரிசுகள் பெறுகிறார். அருகே திரு எம். ஜி. ஆர். மகிழ்கிறார்.

2. பூனா திரைப்படக் கல்லூரி மாணவர்களான அஸ்ரானி, கன்வார் பெயின்டல், சுபாஷ்கார், சுரேஷ் சத்வால்.

## அத்தியாயம் 22

**வா**சுவைக் கண்டதும் உணர்ச்சி வசப்பட்டுவிட்ட ரமா தன்னைச் சமாளித்துக் கொள்ளுவதற்குள், காந்தி கோபித்துக் கொட்டின வார்த்தைகளை ரமா எதிர்பார்க்கவே இல்லை. அன்புச் சகோதரி எப்படியெல்லாம் நினைக்க ஆரம்பித்து விட்டாள்? இதே சகோதரிதானே அவளுடைய காதல் கனிவு பெறச் செய்ய உயர் தியாகமாகத் தன் காதலைக் கூட மறைத்திருந்தாள்! கடைசியில் ஒரே நிமிடத்தில் அவளைத் தூக்கி எறிந்து பேசிவிட்டாளே!

இந்த இரண்டாவது அதிர்ச்சியிலிருந்து விடுபடுவதற்குள் ஆனந்த் கூறிய வார்த்தைகள்... அவள் நெஞ்சு படபடத்தது. முதலிரண்டு அதிர்ச்சிகளும் வேதனையைக் கொடுத்த நேரத்தில் ஆனந்தின் வார்த்தைகளோ.... அந்த உணர்ச்சியை என்னவென்று சொல்வது? அவளுக்கே புரியவில்லை. அதிர்ச்சிகளுக்கு எத்தனை உணர்ச்சிப் பொருள்கள் இருக்கின்றன என்பது புரிந்தது. ஆனந்த் அந்த நேரத்தில் இங்கு இல்லாமலிருந்தால் காந்திகூட எப்படி யெல்லாம் கூறியிருப்பாளோ? அவன்தானே காந்தியையும் அவள் தந்தையையும் அங்கே மேலும் தங்கவிடாமல் அனுப்பி வைத்தான்!

ரமாவுக்கு இதற்கிடையே தந்தையைப் பற்றின நினைவு வந்தது. பாவம் அப்பா, இத்தனை நாட்களாக ஒன்றும் புரியாத நிலையில்தான் அவர் இருந்திருக்க வேண்டும். அதனால்தான் வெகுளித்தனமாகக் காந்தியையும் வாசுவையும் அவர் அழைத்து வந்துவிட்டார். மகளின் மீது எவ்வளவு கரிசனம் அவருக்கு? வாசுவையும் காந்தியையும் சம்மதிக்க வைக்கக் கூட எத்தனையோ பாடுபட்டிருப்பார்...!

ஆவலும் அன்புமாக அழைத்து வந்தவருக்கு இங்கு நடந்த நிகழ்ச்சிகள் புரியாத புதிராகக் கண்டிப்பாக வேதனையைத்தான் அளித்திருக்கும். வீட்டுக்குச் சென்று வாசுவிடம் அவர் ஏதேனும் கேட்டிருப்பாரோ, என்னவோ? வாசு போன வேகத்தைப் பார்த்தால்



நல்லபடி வீட்டுக்குச் சென்றிருக்கவேண்டுமே என்று தோன்றியது.

அடுக்கடுக்கான நிகழ்ச்சிக் கோவையின் சிந்தனையில் இருந்தவனுக்கு நடுவில் ஒரு சிதறலாக ரூபகுமாரின் நினைவு வந்தது. அவன் தன் சுய நினைவோடு மாடியிலிருந்தது அவளுக்குத் தெரியும். தெரிந்திருந்த அந்த விஷயத்தை அவள் நிமிஷமாக மறந்து விட்டிருந்தாளே! அறிவுக்கும் மனத்துக்கும் வேலைப்பாடுகளில் சம்பந்தம் இல்லாமல் அல்லவா இருந்திருக்கிறது!

கீழே நடந்தவை அனைத்தையும் ரூபகுமார் கண்டிப்பாக அறிந்திருப்பார். கண்ணால் காணாத நிகழ்ச்சிகளைக் காதால் அவசியம் கேட்டுக் கொண்டிருப்பார். அவர் மனம் என்ன நிலையில் இருந்திருக்கும்? கோபத்தில் கொந்தளிக்கும் அளவுக்குப் போயிருக்காது என்பது நிச்சயம். ஏனெனில் அப்படியிருந்திருந்தால் அவர் கண்டிப்பாக ஒரு வேகத்தோடு கீழே இறங்கி வந்திருப்பார். காரசாரமான விவாதம் நடந்திருக்கும். ஆனால் அப்படி நடக்கவில்லை. அதற்கு என்ன பொருள்?

ஒருகால் இங்கு நடந்தது ஒன்றும் அறியாமலேயே படுத்திருக்கிறாரோ? ஆனால் அவள் பேசியபோது சுய உணர்வோடுதானே இருந்தார்? பச்சாதாபத்தின் உச்ச கட்டத்தில் மீண்டும் தவிக்க ஆரம்பித்து விட்டாரோ?

தன் மன வருத்தத்தை மறைக்க அவன் கையாளும் பொருள் வீட்டிலேயே இருந்தது அவளுக்குத் தெரியாது.

நிமிட நேரத்தில் ரூபகுமாரின் நினைவில் அவள் மாடி ஏறினாள்.

அங்கே....!

இப்படி வீட்டிலேயே நடக்கும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை!

'இதோ பாருங்கள்' என்று அவள் எழுப்பிய குரலில் ரூபகுமார் திரும்பிப் பார்த்து விட்டான்.

ரமாவை அங்கே கண்டதுமே அவன் சப்த நாடியும் ஒடுங்கியது. அத்துடன் அவள் கையிலிருந்ததைப் பார்த்ததும், ''ரமா என்ன இது? அதைக் கீழே வைத்து விடு'' என்று ரூபகுமார் கூவினான். தன் கையிலிருந்ததையும் கீழே வைத்து விட்டான்.

ரமா எதற்காக அந்தப் பாட்டிலைக் வைத்திருக்கிறாள் என்பது அவனுக்குப் புரியவில்லை.

''இதைப் பார்க்கிறீர்களல்லவா ?'' ரமா செப்பிடு வித்தைக்காரன்போல ஒரு கேள்வி கேட்டு வைத்தாள்.

''கண்கள் இருளவில்லை ரமா... நீ..''

''இதை நான் உபயோகிக்கப் போகிறேன்....''

''வேண்டாம் ரமா, கீழே வைத்து விடு. உங்களைப் போன்றவர்கள் இதைத் தொடக் கூடாது....'' ரூபகுமார் அவள் அருகில் ஓடினான்.

''அவ்வளவு சுலபமாக நான் இதை வைத்துவிடுவேன் என்று எண்ணுகிறீர்கள். இதை நானும் வாயில் ஊற்றி வயிற்றில் தள்ளப் போகிறேன்.''

''இதென்ன ரமா, இப்படியெல்லாம் பேசுகிறாய்? நீ இதையெல்லாம் ருசிக்கக் கூடாது. அவ்வளவுதான் நான் சொல்வேன். நான் உன் கணவன். இது என் கட்டளை.''

''அப்படியானால் என் கணவர் மற்றொன்றும் தெரிந்து கொள்ளட்டும். மனைவியானவள் கணவர் கடைப்பிடிக்கும் வழியைப் பின் பற்ற வேண்டும் என்பது பெரியவர்களின் வாக்கு. அதையே தான் நானும் இப்போது செய்கிறேன்!''

''என்னைக் கொல்லாதே, ரமா. நான் ருசிப்பதன் காரணம் உனக்குத் தெரியும்.''

''அதே காரணத்துக்காகத்தான் நானும் இதை எடுக்கிறேன் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள்.''

''ரமா! உனக்குத் தெரியாது. உன்னைக் கட்டாயப்படுத்தி எத்தனையோ விவரங்களை மறைத்து வீம்புக்காக நான் உன்னை விவாகம் செய்து கொண்டேன். இப்போது இந்தக் கட்டாய விவாகத்தின் பலன் எனக்குப் புரிகிறது. அந்த விவாகத்தினால் உனக்கு நான் நிம்மதி கொடுக்க முடியவில்லை. நாளடைவில் எல்லாம் சரியாகி விடும் என நான் நினைத்தது தவறாகி விட்டது. மன வேதனையால் நீ வாடுவதைக் காண எனக்குச் சகிக்கவில்லை.



''ரமா! நானும் உன்னை நேசிக்கிறேன்; காதலிக்கிறேன். விரும்புகிறேன்..... அதனால் தான் நீ வாடித் துவள்வது எனக்குச் சகிக்கவில்லை.''



நெஞ்சு முட்டத் தன் உள்ளக் கிடக்கை

யைக் கூறி விட்டு, அவன் கட்டிலில் போய் விழுந்தான்.

ஆண் மகனான அவனுக்கே கண்களில் நீர் முட்டும் அளவுக்கு அவன் மனம் தவித்தது. தலையணை ஈரமாகியது. உடல் தூக்கித் தூக்கிப் போட்டது.

ரமா நெஞ்சுருகித் தவித்தாள். கையிலிருந்ததைக் கீழே வைத்துவிட்டு ரூபகுமாரின் அருகே சென்றாள். அவன் கட்டில்மீது அமர்ந்து அவனை மெள்ள அணைத்துக் கொண்டாள்.

தானாக விரும்பி ரமா செய்த முதல் அணைப்பு இது. ரூபகுமாருக்கு உடலெல்லாம் புல்லரித்தது. அவனை அணைத்துச் சாய்ந்தபடியே ரமா கண்ணீரை உகுத்தாள். அவனும் உணர்ச்சித் தவிப்பில் கண்ணீரை மடை திறந்து பெருக விட்டான். மெள்ள அவள் கைகளை எடுத்துக் கண்களோடு ஒற்றிக் கொண்டே கூறினான்:

''ரமா! நானும் அருகதை உள்ளவன் என்பதை நீ இந்த அணைப்பில் காட்டி விட்டாய். அது போதும். வேதனையை மறக்க இந்த நிகழ்ச்சி ஒன்றை நினைவில் வைத்துக் கொண்டாலே போதும். வேறு சாதனங்கள் இனி எனக்கு வேண்டாம்.''

அவன் கண்களில் நீர் பனித்தது.

''குமார்! உங்கள் வேதனையை மறக்க நீங்கள் இது போன்ற வழியில் பிரவேசித்து என்ன சுகத்தைக் கண்டீர்கள்? கட்டாயப்படுத்தி நம் விவாகத்தை நீங்கள் முடித்துக் கொண்டு விட்டதைக் காட்டிலும் இது போன்ற தவறான பாதையில் செல்வதால்தான் எனக்கு நீங்கள் மகத்தான தவறு இழைக்கிறீர்கள்.''

விம்மலும் புலம்பலுமாக ரமா வார்த்தைகளைக் கொட்டினாள்.

''இல்லை ரமா! எனக்கு இப்போது எல்லாம் புரிகிறது. என் புத்தி தெளிந்து விட்டது. நான் இனி மேல் இதைக் கையாளும் தொடமாட்டேன். நீ வருந்தாதே. ரமா! உனக்குப் பூரணமான மகிழ்ச்சியை நான் தர முடியா விட்டாலும் இந்த அளவுக்கு வேதனையாவது தராமல் இருக்கிறேன். வீட்டில் இருக்கும் இத்தனை சரக்குகளையும் நீயே



Who cares if your hair is different?

# Sunsilk cares –
## with 3 special shampoos

**Pick the one that's perfect for you**

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease...gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair...revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** - more than a shampoo, a cosmetic for your hair

*Quality Products by HINDUSTAN LEVER*

LINTAS-SS. 11-149



**ஸ்லீப்பர் பஸ்!**

சென்ற 1969 செப்டம்பர் முதல், ஆறு வாரங்களுக்கொரு முறை, ஜெர்மனியிலிருந்து பிரயாணிகள் பஸ்கள் இந்தியாவுக்கு வருகின்றன.

ரோடல் பிரயாண நிறுவனம் (Rotel Tours) இந்தப் பிரயாணத் திட்டத்தைத் துவக்கியுள்ளது.

பஸ்ஸுடன் இணைந்த டிரெய்லரில், பஸ் பயணம் செய்பவர்களுக்காகப் படுக்கை வசதி மட்டுமின்றி, குளியலறை, சமையலறை வசதிகளும் செய்யப்பட்டிருக்கின்றன!

- தகவல்: ஏ. சுவாமிநாதன்

ஷிமே கொட்டிவிடு!'' என்று உறுதியான குரலில் ரூபகுமார் வாக்குக் கொடுத்தான்.

சற்று நேரம் மௌனமாக இருந்த ரமா மெள்ளக் கூறினாள்: ''குமார்! நான் என் தவற்றையும் ஒருவிதத்தில் ஒப்புக் கொள்கிறேன். நீங்கள் என் கணவர் என்று ஆவதும், அத்துடன் தாய்மையையும் பெற்ற பிறகு நான் வாசுவைக் கண்டதும் உணர்ச்சிவசப்பட்டிருக்கக் கூடாது. ஆனால் என்னால் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. நான் உங்களிடம் ஒன்றையும் மறைக்க விரும்பவில்லை. என்னையும் மீறி நான் உணர்ச்சி வசப்படும் போது நீங்கள் அதைப் பொருட்படுத்தாமல் இருப்பதே நலம். ஆனந்த் கூறியதும் உங்களுக்குக் கேட்டிருக்குமே!''

சடக்கென்று யாரோ கிள்ளி எழுப்புவது போல் ரூபகுமார் நிமிர்ந்து உட்கார்ந்தான். ''ஆனந்தா! என்ன கூறினார் ரமா? என்ன கூறினார் உன்னிடம்?'' என்று படபடத்துக் கேட்டான்.

ரமா தான் முதல் நாள் அவரை விரட்டியது பற்றியும், மறு நாள் அதையும் பொருட்படுத்தாமல் தன் வீடு தேடி வந்தது பற்றியும் கூறி, ஆனந்த் பகன்ற வார்த்தைகளையும் கூறினாள்.

ஆனந்த் தன் நெஞ்சைத் திறந்து காட்டிய முக்கிய கட்டத்துக்கு ரூபகுமாரின் மனம் முக்கியத்துவம் அளிக்கவில்லை. அவன் அதற்கு மேல் வேறு ஒன்றை எதிர்நோக்கினான். தான் இது காறும் ஆனந்தை நோக்கும்போதெல்லாம் அச்சத்தைக் கிளறிய அந்தக் கட்டத்தை ஆனந்த் கூறாமலா இருந்திருப்பான்?

''ஆனந்த் நேற்றும் இன்றும் வந்தது எனக்குத் தெரியும். ஆனால் அவர் வேறொன்றையும் கூறவில்லையா? நன்றாக யோசித்துப் பதில் கூறு, ரமா! ஆனந்த் வேறு ஒன்றுமே கூறவில்லையா?''

ரமாவுக்கு அவனுடைய படபடப்பு வியப்பை அளித்தது. ''ஏன் இப்படிப் படபடக்கிறீர்கள்? வேறு என்ன கூறி இருக்க முடியும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்?''

''ரமா! ஆனந்த் உன்னிடம் இது பற்றிக் கூறாதது எனக்கு வியப்பை அளிக்கிறது. தன் பெருமையைத் தானே பறைசாற்றிக் கொள்ளாத அவருடைய உயர்ந்த குணமும், ஆஸ்பத்திரியிலிருந்து உடனே அவர் மேனாடு கிளம்பியதும் எனக்குச் சாதகமாக அமைந்தன. திரும்பி வந்ததுமே அவர் உன்னைப் பார்க்க வந்தார். ஆனால் நீ தாய்மை உற்றிருக்கிறாய் என்று டாக்டர் கூறியதுமே அவர் உன்னைக்கூடச் சந்திக்காமல் ஓடிவிட்டார். இதையெல்லாம் நான் உன்னிடம் கூறாமலே மறைத்து விட்டேன். பிறகு நீங்கள் இருவரும் சந்திக்கும் போது அவர் எந்தச் சந்தர்ப்பத்திலும் உன்னிடம் கூறக் கூடும், அதனால் நீ வெகுண்டு எழுவாய் என்றெல்லாம் நான் எதிர்பார்த்தேன். ஆனால் இது வரை அவர் உன்னிடம் கூறவில்லை என்பது இப்போதுதான் புரிகிறது...ரமா!

''ஆனந்த் கூறாத அந்த நிகழ்ச்சி என் மனத்தோடு அரித்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும் நானே உன்னிடம் சொல்லி விடுகிறேன். என் மனத்திலிருந்து ஒரு பாரமாவது குறையும்'' என்றான் ரூபகுமார்.

''சொல்லுங்கள்!'' - ஆவலுடன் ரமா அவனை நோக்கினாள்.

ரூபகுமார் ஒவ்வொரு அக்ஷரமாகச் சேர்த்து வார்த்தைகளைப் புனைந்து, அவ்வார்த்தைகளிலிருந்து வாக்கியங்களை அடுக்கிக் கூறியபடி வந்தான். ஆனந்தும் அவனும் பங்கு கொண்டிருந்த நிகழ்ச்சிகளை ஒன்று விடாமல் அவன் வர்ணித்துக் கூறினான். ரமாவின் வெறுப்பைச் சம்பாதிக்க நேர்ந்தாலும் அப்போதிருந்த மன நிலையில் எல்லாவற்றையும் ஒளிக்காமல் ரமாவிடம் கூறி விடவே அவன் முனைந்தான்.

அவள் ஆடாமல் அசையாமல் கேட்டுக் கொண்டே வந்தாள்.

பிரளயமாக ரமா கொதித்து எழுவாள், கூக்குரலும் கூச்சலுமாகப் போடுவாள் என்றுதான் அவன் எதிர்

பார்த்தான். அந்தப் பிரளயத்தைத் தாங்கும் துணிவையும் வருவித்துக் கொண்டான்.

ஆனால் கடைசியில்....

கூறி முடித்ததும் அவன்தான் தேகம் குலுங்க விம்மினான். அவளோ... வெகுநேரம் வரை எங்கேயோ ஒரு மூலையைப் பார்த்தபடி அமர்ந்து கிடந்தாள். அவள் மார்பு படபடத்துப் பெருமூச்சுகளுக்கு இடமளித்தது நன்றாகத் தெரிந்தது. முடிவில் பெரிய ஆரவாரத்துடன் மழை பெய்யும் செய்கையைக் காட்டிவிட்டுத் தூரல்கூடப் போடாது ஓடிவிடும் மேகமாக அவள் எழுந்து ஒரு வார்த்தை கூறினாள்: ''நாம் இதை யெல்லாம் நினைவில் நிறுத்திக் கொள்ள வேண்டாம். மறந்து விடுவோம்.''

ரூபகுமார் அவளுடைய இந்தச் செய்கையை நம்ப முடியாமல் திணறினான்; தவித்துப் போனான்.

சிறிது மௌனத்துக்குப் பின் ரூபகுமாரைப் பார்த்து, ''சாப்பாட்டை முடித்துக் கொண்டு நாம் காரிலேயே இன்று கோடைக்கானல் போகிறோம்'' என்றாள் ரமா.

ரூபகுமார் திடுக்கிட்டான்: ''என்ன சொல்கிறாய், ரமா?''

''இடமாற்றம் தேவை என்று எனக்குத் தோன்றியது. மறுக்காமல் கிளம்புங்கள்.''

கட்டளையாகக் கூறிவிட்டு ஏற்பாடுகள் செய்யச் சென்றவள் முதல் காரியமாக போனில் கோசல்ராமை அழைத்து விவரம் சொன்னாள்.

அதைத் தொடர்ந்து அவளுக்கு வேதனை தரும் அந்தச் செய்தி கிட்டியது. ஆம், வாசு—காந்தியின் விஷயம் தான். அந்த வேதனைக்கு மருந்தாக ஆனந்த் தான் நிற்க முடியும் என்று தோன்றவே, ஆனந்தைப் பார்க்கப் புறப்பட்டாள். தானே அனைத்தும் கூறி விட்டதால் இனி ஆனந்த் என்ன கூறி விடுவானோ என்ற அச்சம் ஒழிந்த நிலையில் இருந்ததால் ரூபகுமாரும் அவளைத் தடுக்கவில்லை.

ஆனந்துக்கு ரமா வந்ததும் சொன்னதும் விடைபெற்றதும் கதை போல் இருந்தது.

அவள் விடைபெற்றபோது ஒன்றும் பேச முடியாமல் திணறினான். 'இந்த ரமாவைத் தெய்வம் என்று கொள்ளலாமா? அல்லது தெய்வத்துக்கும் அப்பாற்பட்ட பொருள் ஏதேனும் இருக்குமோ! எல்லாம் தெரிந்தும் இவளால் எப்படி அமைதியாக இருக்க முடிகிறது? தாய்மை காரணமாக இருக்கலாமா? அல்லது...' யோசனையில் ஆழ்ந்து விட்டான் ஆனந்த்.

''ஆனந்த், சில நல்ல குணங்கள் கூடச் சில சமயம் நம்மை அறியாமல் விபரீதப் பலனை ஏற்படுத்தி விடுகின்றன, பார்த்தாயா?'' என்றார் சீதாபதி.

''என்னப்பா, சொல்கிறீர்கள்?''

''இப்போது ரமா சொன்ன பிறகு தான் எனக்கே தெரிகிறது. ஆஸ்பத்திரியில் இரத்த தான நிகழ்ச்சி பற்றிக் கூறினால், இது தற்புகழ்ச்சியாகிவிடும் என்று மௌனமாகவே நீ வெளிநாட்டுக்குப் பயணமாகி விட்டாய். அப்போது மட்டும் நீ அதை யாராவது ஒருவரிடமாவது கூறியிருந்தால்...''

ஆனந்த் இதய இறுக்கத்தோடு கண்களை மூடிக் கொண்டு விட்டான். அந்த மூடிய கண்களுள்... பழைய நிகழ்ச்சி...

பியூனிடமிருந்து செய்தி கேட்டதுமே அவன் ஆஸ்பத்திரிக்கு ஓடுகிறான். அங்கு ரமா மூர்ச்சித்திருப்பது அவனுக்குத் தெரிகிறது. உயிருக்கு ஆபத்தில்லை என்பதை மட்டும் அறிந்து வாசுவின் அறைக்கு ஓடுகிறான். அங்கு இரத்தம் ஏற்ற ரூபகுமாரின் இரத்தம் பரிசோதிக்கப்படுகிறது. ஆனால் டாக்டர்கள் முகம் சுளித்து நிற்கின்றனர். சரியான பொருத்தமில்லை. உடனே ஆனந்த் தன் இரத்தத்தைப் பரிசோதனைக்குத் தருகிறான். டாக்டரின் முகம் மலருகிறது. எனவே, டாக்ஸியை மணிக்கணக்கில் காத்திருக்கச் சொல்லிவிட்டு இரத்தம் கொடுக்கத் திரும்புகிறான். அவன் இரத்தம் வாசுவுக்கு உதவுகிறது. நல்ல கட்டுக்கோப்பான அவன் உடலில் இத்தனைக்கும் சிறிதும் தளர்ச்சியோ அயர்வோ ஏற்படவில்லை. குறித்த நேரத்துக்குக் கிளம்பி விடுகிறான்.... கிளம்பும்போது ரமாவைப் பார்த்ததும் ஒரு சிறு தவறு செய்து விடுகிறான். ஆம், தற்பெருமையாகத் தனது இரத்த தான நிகழ்ச்சியைக் கூறிக் கொள்ளவில்லை. ரூபகுமார் விதித்திருந்த நிபந்தனை அவனுக்குத் தெரியாதே! அத்துடன் ரூபகுமார் அங்கேயே தங்கியிருந்தாலும், பகைவனாக இருந்தும் நல்லவனாக இரத்தம் கொடுக்க முன்வந்திருந்தாலும் அவனுக்கு இரத்ததான நிகழ்ச்சி பெரிதாகப் படவில்லை. ஆனால் அதற்குப் பிறகு ரூபகுமார் நிபந்தனையைக் கூறிக் கட்டாயப்படுத்தாமலிருக்கும் போதே ரமா தானாக அச்சத்தின் காரணமாக விவாகத்தை முடித்துக் கொண்டிருக்கிறாள், தனக்குச் சாதகமாக முடிவதைக் கண்ணுற்ற ரூபகுமார் உண்மையைக் கூறாமலே விட்டிருக்கிறான்....விவாகம் என்று முடிந்த பிறகு ஆனந்த் வந்து

உண்மையைக் கூறினாலும் என்ன செய்துவிட முடியும்?

''ஐயோ, அப்பா !''

ஆனந்த் வாய் திறந்து கூவிவிட்டான்.

''அம்மா, முடியாதென்றால் முடியாதுதான். நான் கண்டிப்பாகச் சொல்லி விட்டேன்.'' வாசு கூவிக் கொண்டிருந்தான்.

'' வாசு, உன்னிடம் நல்லதனமாக நான் எத்தனையோ முறை சொல்லி விட்டேன். நீ இன்னும் கேட்டுக் கொள்ள வில்லை. இனியும் நீ பிடிவாதம் செய்தால் நானும் பொல்லாதவளாகத்தான் நடந்து கொள்ள நேரிடும்'' என்று தேவகி எச்சரித்தாள்.

'' உன்னுடைய மிரட்டல்களுக்கெல்லாம் நான் அசைந்து கொடுக்கமாட்டேன் அம்மா.''

''அப்படியானால் விவாகத்துக்கு ஏன் ஒப்புக் கொண்டாயாம்? விவாகமே வேண்டாம் என்பதுதானே ?''

'' நான் அப்படித்தான் சொல்லிக் கொண்டிருந்தேன். நீதான் விவாகம் செய்து கொள் என்றாய். உன் தொந்தரவுக்காகத்தான் தாலி கட்டினேன்.''

''போய், உன் நெஞ்சைத் தொட்டுப் பேசடா. விவாகம் செய்து கொள்ளும்படி-நான் உன்னிடம் கூறியது உண்மைதான். ஆனால் அப்போது நீ என் மீது எரிந்து விழுந்து கொண்டுதான் இருந்தாய். பிறகு நீயே வந்து விவாகத்துக்குச் சம்மதம் தெரிவித்தாய். இப்போது இதெல்லாம் என்ன கூத்து?'' தேவகியின் குரல் பெரிதாக ஒலித்தது. வாசு நிற்கவே யில்லை. சட்டையை மாட்டிக் கொண்டு வெளியே சென்று விட்டான்.

தினமும் இப்படி நடப்பது வழக்கமாகி விட்டது. தேவகி தன் மகன் மீது எவ்வளவு அன்பு காட்டினாள் ! ரமாவுடன் அவன் விவாகம் நடக்காத போது எவ்வளவு பரிதாபம் காட்டி ஆதரவுடன் அணைத்துக் கொண்டாள்! இப்போது அவளுக்கே தன் மகனைக் காணும் போது எரிச்சல் எரிச்சலாக வந்தது. அவன் செய்கைகளை வெறுத்தாள். அவனைப் பார்க்கும்போதெல்லாம் கூச்சலிட்டாள்.

விவாக தினத்தன்று வாசு நேராக ஸ்கூட்டரில் ரமாவின் வீட்டிலிருந்து விவாக மண்டபத்துக்குத்தான் வந்தான். வந்தவன் ஸ்கூட்டரை அங்கேயே விட்டு விட்டு டாக்ஸியைப் பிடித்துக் கொண்டு தன் வீட்டுக்குச் சென்று விட்டான்.

ஆனந்தும் ரமா வீட்டுக்குச் சென்றிருப்பது சீதாபதிக்குத் தெரியும். கோசல்ராமும் காந்தியும் மட்டும் ரமாவின் வீட்டிலிருந்து காரில் திரும்பியதைக் கண்ட தேவகி, 'வாசு எங்கே?' என்றுதான் கேட்டாள்.

காந்தி பதில் ஒன்றும் கூறவில்லை. கோபம் கொந்தளிக்க ஓர் அறைக்குச் சென்று ஒரு மூலையில் அமர்ந்து விட்டாள். கோசல்ராம்தான் அவ்விருவரிடமும் ரமாவின் வீட்டில் நடந்த நிகழ்ச்சிகளை இரகசியமாகக் கூறினார்.

தேவகிக்குத் திக்கென்றது. அவள் உடனே தன் வீட்டுக்குப் புறப்பட்டாள்.

சீதாபதி காந்தியையும் அவளுடன் அனுப்பிவிட விரும்பினார். காந்தியும் இல்லையென்றால் தம்பதிகளாக வீட்டுக்குச் சென்று விட்டனர் என்று கூறிச் சமாளித்துவிடலாம் என்று எண்ணினார் அவர்.

காந்தி வெகுவாக முரண்டு பிடித்தாள். சீதாபதி அவளுக்குப் பலவிதமாக எடுத்துரைத்த பிறகுதான் தேவகியோடு போகச் சம்மதித்தாள்.

ரமாவின் வீட்டிலிருந்து திரும்பிய வாசு நிலைகொள்ளாமல் தவித்தான். ரமாவை ஆத்திரமூட்டி வேடிக்கை பார்க்க நினைத்துத்தானே அவன் விவாகம் என்ற போர்வையால் தன்னை மூடிக் கொண்டான்? கடைசியில் அவளைப் பார்த்த போது.....

உடம்பே சிலிர்த்தது.

ரமா தாயாகப் போகிறாள். அவன் நினைத்ததைக் காட்டிலும் ரமா ஒரு படி முன்னேறி விட்டிருக்கிறாள். அந்தத் தாய்மையைக் காந்திக்கும் அளித்து அவனால் மட்டும் எதிர்த்து நிற்க முடியாதா? ஐயோ ! அப்படி நினைக்க முடியவில்லையே ! ரமாவின் விவாகத்தால் தான் மலைத்துவிட வில்லை என்று ஒரு பொய்ப் பிரசாரம் செய்யத்தானே அவன் காந்தியை மணந்தான்? அதற்கு மேல் காந்திக்கு வேறுவிதமான அந்தஸ்தை அளிக்க அவன் மனத்தாலும் திட்டமிடவில்லையே.... ரமாவிடம் வஞ்சம் தீர்ப்பது போல் எதை எதையோ அவன் செய்ய விரும்பினாலும் மனைவி என்ற பொருளில் ரமாவுக்கு அளிக்கக்கூடிய பதவியை மற்றொரு பெண்ணுக்கு அளிக்க அவன் மனம் துணியவே இல்லை.

இப்படியெல்லாம் சிந்தித்துச் சிந்தித்து அவன் உருக் குலைந்து கொண்டிருந்த போது, தேவகியும் காந்தியும் வந்து சேர்ந்தார்கள். காந்தியின் முகமெல்லாம் சினத்தின் ஜுவாலை எரிந்தும் பொலிவு குன்றாமல் அழகுப் பொம்மையாகத் தான் காட்சி தந்தாள். (தொடரும்)



# கோடையில் குளுமை பஜாஜ் அளிக்கும் பரிசு!

- பஜாஜ் க்ளேஸியர் ஜூனியர் ரூம் கூலர்
- பஜாஜ் ஐஸ்-க்ரீம் ஃப்ரீஸர்
- பஜாஜ் மிக்சர் மேலும்
















■ ... கவர்ச்சிகரமான அநேகவித ரகங்களில் விசிறிகள் தேர்ந்தெடுக்க

ப்யூடி விசிறிகள்

225மிமீ



400மிமீ



500மிமீ





**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**
45-47 வீர் நாரிமன் ரோடு, பம்பாய்-1
கிளைகள் இந்தியா முழுவதும்

heros BE-54 TAM

# மாப்பிள்ளைக்கு ஒரு டாட்டா!

— மயிலை மூர்த்தி

அன்று நடுப்பகலிலிருந்தே வீடு அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. வீட்டு அங்கத்தினர் எல்லோரும் திரு ராகவன் தலைமையில் ஓர் அவசர மகாநாடு கூட்டித் தீர்மானம் எடுத்ததன் விளைவாக, காவேரி அம்மாள், ராகவனின் தாயார் சமையலறையில் தன் கைவரிசையைக் காட்டிக் கொண்டிருந்தாள். 'கம்'மென்று வீசிய நெய் வாசனையைத் தொடர்ந்து, கொதிக்கும் எண்ணெயின் கமறல் நெடியும் வீசிக் கொண்டிருந்தது. அதைத் தொடர்ந்து பாத்திரங்களின் ஓசை, டப்பாக்களை மூடித் திறக்கும் சத்தம் இத்தியாதி.

தன்னை வாரிக் கொள்ள மறுத்து, அந்த வீடு முழுதும் ஓடி அலைக்கழித்த மூன்றே வயதான தன் பெண் பானுவைத் துரத்தியவாறு ஓடிக் கொண்டிருந்தாள், ராகவனின் மனைவி ஜானகி. அவளுக்கென்று ஒதுக்கப்பட்ட வேலைகள் தலைக்கு மேல் இருந்தன. வீட்டிலிருந்த அலமாரியை ஒழுங்குபடுத்தி, மாடியில் உலர்த்தியிருந்த துணிகளை அதில் மடித்து வரிசையாக அடுக்க வேண்டும். அடுத்து, வீட்டு ஹாலைச் சுத்தப்படுத்திப் பொருள்கள் அந்தந்த இடத்தில் இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும்.

ராகவன், குடும்பத் தலைவர் என்ற முறையில் அவ்வப்போது உத்தரவுகள் போட்டு விட்டு, அடிக்கடி சமையலறையில் நுழைந்து, எல்லாவற்றையும் ருசி பார்த்து விட்டு, ஏதாவது ஒரு குறையைச் சொல்லிவிட்டு வந்து கொண்டிருந்தார்.

அந்தச் சிறிய வீட்டில், அன்று அவ்வளவு பரபரப்புக்குக் காரணம் ராகவனின் அருமைக் குமாரி ராஜியிடமிருந்து அன்று 'எக்ஸ்பிரஸ்' தபாலில் வந்த கடிதம்தான். ராஜியின் கணவர் அலுவலக விஷயமாகச் சென்னைக்கு வருவதாகவும், அவரை நன்கு உபசரித்து அனுப்பும்படியும் எழுதியிருந்தாள் அவள். புது மாப்பிள்ளை; திருமணத்துக்குப் பின் மதுரையில் குடித்தனம் வைத்த பிறகு இப்போதுதான் முதல் தடவை வருகிறார். கேட்க வேண்டுமா, உபசாரத்துக்கு!

மாலை நேரமும் வந்து விட்டது. ராகவன் சற்று வெண்மையாக இருந்த வேஷ்டி ஒன்றைக் கட்டிக் கொண்டு, எந்த நிமிஷமும் சட்டையை எடுத்து மாட்டிக் கொள்வதற்குத் தயாராகப் பவியமுடன், உட்காருவதும், எழுந்து நடப்பதுமாக இருந்தார். அவர் அணிந்திருந்த மூக்குக் கண்ணாடி, மேல் துண்டினால் சுமார் ஆறு தடவையாவது துடைக்கப் பட்டிருக்க வேண்டும். அன்று பார்த்துத் தானா சபாவில் மாலியின் புல்லாங்குழல் கச்சேரி இருக்க வேண்டும்! நீண்ட நாள் அவர் ஆவலுடன் எதிர்பார்த்த நிகழ்ச்சி அது. இவ்வளவு எழுதினவள் எந்த மணிக்கு வருவார் என்று எழுதியிருக்கக் கூடாதா? எங்கோ இருந்த மகளை மனத்தால் வைந்து கொண்டார் அவர்.



பானுவுடன் நடந்த போராட்டத்தில் வெற்றி கண்ட ஜானகி, பானுவுக்கு இரட்டைப் பின்னல் போட்டு, இடையே மல்லிகைச் சரத்தைத் தொங்க விட்டிருந்தாள்.

பையன் பாலாஜி கிரிக்கெட் விளையாடி விட்டு வீடு திரும்பியவன், வீட்டில் இருந்த மாறுதல்களைக் கவனித்துவிட்டு, ''என்னம்மா விசேஷம்?'' என்று கேட்டவாறு உள்ளே நுழைந்தான்.

''மதுரையிலிருந்து இன்னிக்கு உங்க அத்திம்பேர் வரார்டா. கடுதாசு வந்திருக்கு; ம், சீக்கிரம் டிபன் சாப்பிட உட்கார்'' என்றாள் ஜானகி.

''வீட்டில் இருப்பவர்கள் எல்லோரும் காலாகாலத்தில் டிபன் சாப்பிட்டு விட்டால், மாப்பிள்ளைக்கு மட்டும் எடுத்து மூடி வைத்து விடலாம்.'' — சமையலறையிலிருந்து காவேரியின் குரல் கேட்டது.

ராகவன் குழந்தைகளுடன் டிபன் சாப்பிட உட்கார்ந்தார். தட்டில் போடப்பட்ட நெய் மணக்கும் ரவாக் கேசரியை ஒரே வாயில் அள்ளிப் போட்டுக் கொண்ட பாலாஜி, ''இன்னும் போடு, பாட்டி'' என்று தகராறு செய்து கொண்டே இருந்தான்.



டிபனை முடித்துக் கொண்ட ராகவன் ஹாலுக்கு வந்து விட்டார். ஜானகி, வாசலில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகளின் விளையாட்டை ரசித்துக் கொண்டிருந்தாள்.

ரேடியோவில் இரவு தமிழ்ச் செய்தி அறிக்கை நடந்து கொண்டிருந்தது.

''ஏம்பா, மாப்பிள்ளையைக் காணுமே. இரவில் சமையல் செய்ய வேண்டுமா? ஒன்றும் தெரியவில்லையே!'' என்றவாறு ராகவன் இருக்குமிடம் வந்தாள் காவேரி.

''தெரியல்லேம்மா, இன்னிக்கு வரார்னுதான் போட்டிருக்கு'' என்றவர், ''இரு, எதற்கும் கடிதத்தை மற்றொரு தடவை பார்த்து விடுகிறேன்'' என்றவாறு தம் அறைக்குள் நுழைந்தார். விளக்கைப் போட்டவருக்கு ஒரே வியப்பு. பாலாஜி நின்று கொண்டிருந்தான் அங்கே.

''டேய், இருட்டிலே என்னடா செய்து கொண்டிருக்கே?''

''ஒன்றுமில்லேப்பா.''

''ஒன்றுமில்லேயா? இங்கே வாடா.'' அவனை அருகில் இழுத்தவர், டிராயர் பைக்குள் கையை விட்டுச் சோதனை செய்தார். கையை வெளியே எடுத்தபோது ஒரு கடிதமும் கூடவே வந்தது. கடிதத்தைப் பார்த்தவர் திடுக்கிட்டார்.



''இதைத்தான்டா தேடிக் கொண்டு வந்தேன். இது எதற்குடா உனக்கு?'' என்றார். பையன் கடகடவென்று சிரித்தான்.

''என்னடா, சிரிக்கிறே? என்ன விஷயம்?'' என்றார் சற்றுக் கடுமையாக.

''அப்பா, நீ கோபப்படமாட்டேன்னு சொன்னா; நான் உண்மையைச் சொல்றேன்.''

''சரி, சொல்லுடா, சீக்கிரம்.'' — உள்ளே வந்த ஜானகிதான் அதட்டினள் தன் மகனை.



''இன்னிக்கு மாப்பிள்ளையும் வரலே, ஒருத்தரும் வரலே.''

''அடப் பாவமே!'' — பாட்டி காவேரி அம்மாள் உட்பட, மூவர் குரலும் ஒரே குரலாக ஒலித்தது.

''அப்பா, அடிக்கக் கூடாது. வாக்குக் கொடுத்திருக்கே. இப்போ நான் எல்லாவற்றையும் சொல்லிடறேன்.

''இந்தக் கடுதாசு அக்கா ராஜியிடமிருந்து முதல் தேதி அன்றே வந்துடுத்து. நீங்கள் எல்லோரும் ஏப்ரல் முதல் தேதியன்று வந்த கவர், நிச்சயமாக ஏப்ரல் முட்டாளாக்கும் கவராகத்தான் இருக்குமென்று தீர்மானம் செய்து விட்டீர்கள். கல்லூரியில் படிக்கும் போதே இந்த ராஜி இப்படித்தான் அப்பாவை எவ்வளவோ தடவைகள் ஏப்ரல் முட்டாளாக்கியிருக்கிறாள். கேட்பாரற்றுக் கிடந்த அந்தக் கவரை, அன்று நானே நிதானமாகப் பிரித்துப் படித்துப் பார்த்தேன். அது, நீங்கள் நினைத்தது போல் ஏப்ரல் முட்டாளாக்கும் கடிதம்தான். சட்டென்று யோசனை தோன்றியது. அதே கடிதத்தில் தேதியைத் திருத்தி, இரண்டு நாட்கள் கழித்து, நானே ஒரு கவர் வாங்கி, எக்ஸ்பிரஸ் தபாலில் போட்டு விட்டேன். இதோ பார்.''—கவரை வாங்கிப் பார்த்த ராகவன் வியப்பில் ஆழ்ந்தார். கவரின் மேல் மயிலாப்பூர் என்று முத்திரை குத்தியிருந்தது. ஏமாற்றத்தை வெளியே காட்டிக் கொள்ளாத ராகவன், ''ஏன்டா, அப்படித் தேதியை எல்லாம் மாற்றி, இதெல்லாம் ஏன் செய்தாய்?'' என்று கேட்டார், முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு.

''அப்பா, இது என்னுடைய பொதுவான குற்றச்சாட்டு. நான் ஒரு மாதமாக வீட்டில் ஏதாவது 'ஸ்வீட்' பண்ண வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருந்தேன். 'இப்போ என்னடா 'ஸ்வீட்' பண்ணுவதற்கு. நாளா, கிழமையா, என்ன விசேஷம்? நன்றாக அலைறான்'னு பாட்டி என் வாயை அடக்கி விட்டாள். நீங்கள், பார்வையாலேயே பயமுறுத்தி விட்டீர்கள். எனக்கோ ஆசையாக இருந்தது. அந்தச் சமயத்தில்தான் அக்காவிடமிருந்து கடிதம் வந்தது. என் மூளை வேலை செய்தது'' என்றவன், ''பாட்டி, மாப்பிள்ளைக்காக மூடி வைத்துள்ள அந்த 'ஸ்வீட்'டையும் இரவுச் சாப்பாட்டின் போது எனக்கே போட்டுவிடு, பாட்டி'' என்று கூறி விட்டு வெளியே ஓட ஆரம்பித்தான்.

''படவா ராஸ்கல்; உன்னால் எத்தனை பேருக்குச் சிரமம், அலைச்சல், செலவு; போடா, தோப்புக் கரணம்.'' — பாலாஜியைத் துரத்திக் கொண்டே வாசலுக்கு வந்தார் ராகவன். மாலியின் கச்சேரியைக் கோட்டை விட்ட கோபம் வேறு சேர்ந்து கொண்டது. போதாததற்கு, அடுத்த வீட்டு ரத்னம், ''என்ன மிஸ்டர் ராகவன், மாப்பிள்ளை வருகிறார் போலிருக்கே. உம்முடைய சின்னப் பெண் அறிவிப்பு கொடுத்து விட்டுப்



போயிட்டா. எப்போது வருகிறார்?'' என்று விசாரிக்க ஆரம்பித்து விட்டார்.

'' மாப்பிள்ளையாவது, மண்ணாங்கட்டியாவது ஐயா!'' என்று கூற வந்தவர் வாய் வியப்பினால் அப்படியே அடைத்துப் போனதற்குக் காரணம், வீட்டு வாசலில் வந்து நின்ற டாக்ஸியிலிருந்து சாட்சாத் மாப்பிள்ளை ரகுநாதன்தான் இறங்கிக் கொண்டிருந்தான். ராகவன் முகத்தில் எங்கிருந்துதான் அவ்வளவு கனிவு வந்ததோ! ''வாருங்கள், இப்போதுதான் பேசிக் கொண்டிருந்தோம்; நீங்களே வந்து விட்டீர்கள். ஆமாம், ஏன் இவ்வளவு நேரம்?'' என்றார் மிகவும் சாதாரணமாக.

''நானே எதிர்பார்க்கவில்லை மாமா. நேற்று திடீரென்று மானேஜர் கூப்பிட்டு




உண்மையின் சின்னம்

ESTD: 6-1-1947

# ஸ்ரீ விசாலாட்சி சிட் பண்டு லிமிடெட்

பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:
திருநெல்வேலி-6 போன்: 274

மத்திய அலுவலகமும், முதலீடுகள் பெற்றுக்கொள்ளுமிடமும்:
"S.V.C.F." பில்டிங், 36-B, மவுண்ட் ரோடு, சென்னை-2
(ஸ்பென்ஸர் & கம்பெனி எதிரில்) போன்: 84244

31-3-70ல் ஆடிட்செய்யப்பட்டது. அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ 5 லட்சம். மொத்த ஆஸ்திகள் ரூ 2.50 கோடி. சீட்டில் ஈடுபடுத்திய தொகை ரூ. 4.60 கோடிக்கு மேல். செலுத்தப்பட்ட மூலதனமும் ரிசர்வும் 1.88 லட்சம்

கல்கத்தா ரிசர்வ் பாங்க், பாங்க் அல்லாத நிதி கம்பெனியின் டிபார்ட்மெண்ட் 29-10-66ல் வெளியிட்ட நோட்டிபிகேஷன் DNBCI/ED (S) 66/- பாரா 2 (1) (f)ன் ஸப்கிளாஸ் (x)ன் படி.

எமது கம்பெனியின் ஒரு டைரக்டரால் காரண்டி செய்த லோன் வாங்கப்படுகிறது

| தவணை | வட்டி விகிதம் ரூ. 300லிருந்து ரூ. 5,000 வரை | ரூ. 5,000-க்கு மேல் |
|---|---|---|
| ஒரு வருடம் | $8\frac{1}{2}\%$ P. A. | 9% P. A. |
| இரண்டு வருடம் | 9% P. A. | $9\frac{1}{2}\%$ P. A. |

6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி செக்குகள் அனுப்பப்படுகின்றன. அவைகளை எங்கள் எந்தக் கிளையிலும் ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம்.

*தொழில் விவரம்:*
தமிழ்நாடு, பாண்டிச்சேரியிலும் (அந்தந்த மாநில சிட் பண்டு ஆக்ட் பிரகாரமும்) பெங்களூரில் சிட் பண்டு ஆக்டிடும் இல்லாத பிரதேசம், பிரதி மாதம், மாதம் மும்முறை இனாமி உள்ள ஏலச் சீட்டுகள் நடத்துதல் ரூ. 10,000 வரை மதிப்புள்ள ஏலச் சீட்டுகள் எங்கள் 35 ஆபீஸ்களிலும் நடத்தப்படுகின்றன.

அலுவலக நிர்வாகம்
மானேஜிங் டைரக்டர்:
ஸ்ரீ AR. ராமசாமி
டைரக்டர்கள்:
ஸ்ரீ RM. அருணாசலம்
ஸ்ரீமதி RM. மெய்யம்மை ஆச்சி
மத்திய அலுவலக மானேஜர்:
ஸ்ரீ K. A. ராம், B.A., B.L.

கடந்த மூன்று வருடங்களில் ஆதாயமும் டிவிடெண்டும்:

| வருடம் | வரி கொடுப்பதற்குமுன் லாபம் | வரி கொடுத்த பின் லாபம் | டிவிடெண்ட் விகிதம் |
|---|---|---|---|
| 1966-67 | 79686-41 | 27686-41 | 16% |
| 1967-68 | 89468-58 | 28648-58 | 17% |
| 1968-69 | 98125-26 | 34125-26 | 17% |

பொறுப்புகள் 31-3-1969

| | | |
|---|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வ் நிதி | ரூ. | 1,88,601 |
| பிக்ஸட் டிபாசிட் | ரூ. | 10,400 |
| ஷேர் ஹோல்டர் டிபாசிட்டுகள் | ரூ. | 3,41,050 |
| காரண்டி செய்த லோன்கள் | ரூ. | 24,42,278 |
| தற்காலிகக் கடன் | ரூ. | 1,30,417 |
| சீட்டு இதர பொறுப்பு வகைகள் | ரூ. | 1,76,55,324 |
| மொத்தம் | ரூ. | 2,07,68,070 |

புதிய M. குரூப் ரூ. 25,000 மதிப்புள்ள சீட்டுகள் எங்கள் 12, கிலோதார் தெரு, திருச்சி (போன்: 4276)லும், 43, விஸ்வநாத ராவ் ரோடு, மாதவநகர், பெங்களூர்-1 (போன்: 75955)லும், 6-A, சண்முகம் ரோடு, தாம்பரம், சென்னை-45லும், (போன்: 89499) 13, வடக்கு வெளி வீதி, மதுரை (போன்: 4880)யிலும், 36-B, மவுண்ட் ரோடு, சென்னை-2 (போன்: 84244)லும் நடைபெறும்.

ஆடிட் செய்த பாலன்ஸ் ஷீட்டுகள் வேண்டுபவருக்கு அனுப்பப்படும்

K. A. ராம், பி.ஏ., பி.எல்.
மத்திய அலுவலக மானேஜர்
அனுமதித்த தேதி: 7-4-70

V. மல்லையா, எம்.ஏ., பி.எல்.
பொதுஜனத் தொடர்பு அதிகாரி

AR ராமசாமி
மானேஜிங் டைரக்டர்

பாரமவுண்ட்

மெட்ராஸ் போய் விட்டு வந்து விடு என்றார். இன்னும் பார்க்கப் போனால் உங்க பெண் ராஜிக்குக் கூடத் தெரியாது நான் கிளம்பு வது. ஆபீஸிலிருந்து போன் பண்ணி விட்டுக் குச் சொல்லி விட்டுக் கிளம்பி விட்டேன். வந்த காரியம் ஆயிற்று. இரவு வண்டிக்குக் கிளம்ப வேண்டியதுதான். உங்களையும் பார்த்து விட்டுப் போகலாம் என்றுதான்.''

கையில் பெரிய பொட்டலத்துடன் உள்ளே நுழைந்த மாப்பிள்ளையை ஜானகி ஹால் கத வோரம் நின்றபடி வரவேற்றாள். குழந்தை பாலுவிடம் அந்த 'ஸ்வீட்' பொட்டலத்தைக் கொடுத்தான் ரகுநாதன்.

ராகவன் பரபரப்புடன் சமையல் அறையில் நுழைந்து மெதுவான குரலில், ''அம்மா! நிஜமாகவே மாப்பிள்ளை வந்து விட்டார் அம்மா. முதலில் அந்த 'ஸ்வீட்'டை எடுத்து வை. நான் போய்க் காய்கறி ஏதாவது வாங்கி வருகிறேன்; ஒரு மணி நேரத்தில் சமையல் பண்ணமுடியாதா அம்மா?'' என்றார்.

''ராகவா! அவசரப்பட்டுத் தப்பு பண்ணி விட்டேன்டா. நீ பாலாஜியை மிரட்டியதை யும் அதற்கு அவன் சொன்ன பதிலையும் கேட்டு விட்டு உள்ளே வரும்போது, வேலைக்காரப் பெண் வீட்டுக்குப் போவதாகச் சொன்னாள். காலையிலிருந்தே உழைத்த அந்தப் பெண் ணிடம், மீதி வைத்திருந்த 'ஸ்வீட்'டைக் கொடுத்து அனுப்பி விட்டேன்டா. இப் போது என்ன செய்வது? எப்பவும் இந்தத் திண்டாட்டம்தான் இந்தப் பாழும் ஜன்மத் துக்கு.'' தன்னைத் தானே கடிந்து கொள்ள ஆரம்பித்தாள் காவேரி அம்மாள்.

''நீ ஏம்மா, மனசு கஷ்டப்படறே? பொது வில் ஒன்றுக்கு இரண்டு செலவு செய்வதுதான் நம் ராசி. ம், காய்கறி வாங்கிக் கொண்டு வரும் போது, அப்படியே ஹோட்டலிலிருந்து ஏதாவது நல்ல 'ஸ்வீட்'டாக வாங்கிக் கொண்டு வருகிறேன். முதன் முதலாக நம் வீட்டில் சாப்பிடுகிறார். 'ஸ்வீட்'டோடு தானே சாப்பாடு போடணும்?''

''சரி, சரி, அந்த அவருக்கு மட்டும் வாங்கிக் கொண்டு வராதே; உங்கள் எல்லோ ருக்கும் சேர்த்து வாங்கிக் கொண்டு வா'' என்றாள் காவேரி.

இரவுச் சாப்பாடு முடிந்து, மாப்பிள்ளை ரகுநாதன் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு குறுகிய நேரத்தில், எதிர்பாராது வந்த தனக்கு, ஒரு பெரிய விருந்தையே நடத்தியதற்குத் தன் நன்றியைத் தெரிவித் துக் கொண்டு, புறப்பட்டான். வழியனுப்ப வாசலுக்கு வந்த பெரியவர்கள் மூவரும், தனித் தனியே உள்ளே திரும்பி ஆளுக்கு வசதி யாக ஓர் இடத்தில் அமர்ந்து, சற்றுச் சிந்தனை யில் ஆழ்ந்தனர். ஒருவர் மனத்திலும் நிறைவு இல்லை. வாங்கி வந்த 'ஸ்வீட்' பெருமளவு அப்படியே தங்கி விட்டது. ராகவனுக்கு எவ்வளவோ ஏமாற்றங்கள்! ஆனால் மாப் பிள்ளைக்கு 'டாட்டா' சொல்லி விட்டு, உள்ளே வந்த பாலாஜியோ இனிய நினைவு களில் திளைத்துக் கொண்டிருந்தான். ஆம், நீண்ட நாட்களாக ஒரு ஸ்வீட்டுக்கு ஏங்கி, அதற்கு ஏற்பாடு செய்தவனுக்கு, அதைப் போன்று மூன்று மடங்கு கிடைத்தால், அவனுக்குக் கசக்கவா செய்யும்!

## புரியலேடா கண்ணு!



''அப்பா!''

''என்னடா கண்ணு?''

''எஸ். எஸ். எல். ஸி. ரிஸல்ட் வந்திருக்கே பேப்பர்லே, பார்த்தீங்களா?''

''ஓ....பார்த்தேனே?''

''கேரள மாநிலத்துத் தேர்விலே ஒரு விசேஷம் கவனிச்சீங்களா அப்பா? முதல் மூன்று இடங்கள் அதாவது **Rank** வாங்கி யிருக்கிறவங்க எல்லாம் இங்கிலீஷ் மீடியம் படிச்ச மாணவர்கள்.''

''அதிலே என்ன விசேஷம்....?''

''தாய் மொழியிலேதான் எல்லாப் பாடங்களையும் படிக்கணும்; ஆங்கிலத்திலே படிச்சா சரியாப் பொருள் விளங்காதுன்னு சில அரசியல் வாதிங்க அடிக்கடி சொல்றாங்களே — அது எவ்வளவு பெரிய தவ றுன்னு இப்ப புரியுதில்லே?''

''ஒருகால்.....முதல் மூன்று 'ராங்க்' வாங்கின வங்க எல்லாருக்கும் தாய்மொழி ஆங்கிலமா இருந் திருக்குமோ என்னவோ?''

''அதுதான் இல்லேப்பா! முதல் ராங்க் வாங்கின பெண் பேர் மல்லிகா மேனன். அவ அப்பா டி. கே. சந்திரசேகரன் நாயர். கண்ணனூரிலே போலீஸ் சூபரின்டென்டாம். இரண்டாவது ராங்க் வாங்கின பையன் மாஸ்டர் குமார், கணிதப் பேராசிரியர் டாக்டர் பரமேசுவரனின் மகன். அவர் ஒரு மலையாள எழுத்தாளருங்கூட.''

''அப்படியா?''

''ஆமாம். மூன்றாவது ராங்க் வாங்கின மாஸ்டர் ராம் மனோகர் திரு சங்கர வாரியரின் பிள்ளை. விருது நகரில் ரயில்வே உத்தியோகத்திலே இருக்காராம். கேந்திரிய வித்யாலயாவிலே ஒன்பதாவது வரைக்கும் படிச்ச ராம் மனோகர், சமஸ்கிருதத்தை விருப்பப் பாடமாக எடுத்துக்கொண்டு படிச்சாராம்.''

''இந்த மூணு பேருக்கும் கேரள கல்வி மந்திரி தங்க மெடல் வழங்கிக் கௌரவிக்கப் போறாராம். கவனிச்சயா?''

''உண்மை நிலவரம் இப்படி இருக்கும்போது இங்கே கல்லூரிகளிலே ஏன் தமிழ் மீடியத்தை மாணவங்க மீது திணிக்கிறாங்க?''

''புரியலேடா கண்ணு.''

—பரணி



# தனக்கு

கே. ஜெயலக்ஷ்மி

'டிங்!'

மணி ஐந்தரை.

'க்ளிங்! க்ளிங்!' மெட்டியின் சுநாதவோசை, கூடவே உயர்ந்த ரக வாசனையின் இதமான மணம்.

சாண் அளவுள்ள பூச்சரத்தைக் கைகளில் பிடித்தபடியே அந்த அறையைக் கடந்து உள் அறைப் பக்கம் செல்கிறாள் பூரணி.

செவியைக் கூராக்கிக் கொள்கிறாள் சுதா.

வாசலில் ஸ்கூட்டர் வரும் ஒலி கேட்டது.

"அம்மா! அவர் வந்தாச்சு. போய் வரட்டுமா?"

பதிலில்லை. புத்தகத்தில் படிந்திருந்த பார்வை உள்ளேயும் படியவில்லை; வெளியேயும் திரும்பவில்லை.

ஸ்கூட்டரின் ஒலி மீண்டும் கேட்கிறது.

"அம்மா!..." குரல் தடுமாறுகிறது.

"ம்..." இழுக்கிறாள் கற்பகம்.

சுதாவின் உள்ளத்தில் திருப்தி உதிக்கிறது. 'மாமியார் மாமியார்தானே?' என்று உள்ளம் அம்மாவுக்கு நற்சான்றிதழ் வழங்குகிறது.

"வரட்டுமா, சுதா?" என்று கேட்டுக்கொண்டே வாசலை நோக்கி நடந்துவிடுகிறாள் பூரணி.

சுதா எழுந்து ஜன்னல் வழியாகப் பார்க்கிறாள். உரிமையோடு அண்ணன்மீது படிந்திருக்கும் கரத்தைக் கண்டதும் உள்ளம் புழுங்குகிறது. ஸ்கூட்டர் போய்விட்ட பிறகும்கூடக் காட்சி கண்ணிலேயே நிற்கிறது, கம்சனின் கண்களிலிருந்து மறையாத கண்ணனின் திருவுருவம் போல.

"பிள்ளையை இழுத்துக் கொண்டு நாட்டுப் பெண் போயாச்சே! புடவையை இழுத்துச் செருகிக் கொண்டு சமையல் வேலையைக் கவனிப்பதுதானே?" என்று அம்மாவைச் சாடியபடியே அடுப்பங்கரைக்குள் நுழைகிறாள் சுதா.

சுழலும் பார்வையில் மேஜையின் மீது சமையலை முடித்துப் பாங்காக மூடிவைத்திருப்பதும், அதையும் மீறிக் கொண்டு முருங்கைக்காய் வற்றல் குழம்பின் வாசனை வீசுவதும் தெரிகிறது. பக்கத்து அறைக்குள் செல்கிறாள். ஊதுபத்தியின் மணம் கமழ்கிறது. அங்கே முத்து முத்தாகப் போடப்பட்டிருந்த கோலத்தின் மத்தியில் குத்து விளக்கு மென்னொளி பரப்பி நிற்கிறது. அதில் தீச்சுடரின் இருமருங்கிலும் வெண் முத்துக்களைப் போல் பொட்டு. லோகமாதாவின் பார்வையைச் சந்திக்க நேர்கிறது சுதாவுக்கு. குனிந்து நமஸ்கரிக்கிறாள். நாத்தனார் பூஜை வேலை செய்கிறது. வெளியே வருகிறாள்.

"மணி ஐந்தரைதான் ஆகிறது. இதற்குள் விளக்கேற்ற என்ன அவசரமோ, தெரியவில்லை? எண்ணெய் விலை கொஞ்சமாவா விற்கிறது?"

பதிலில்லை.

"அம்மா! உன்னைத்தான் கேட்கிறேன்."

"விளக்கேற்றாமல் சுமங்கலிப் பெண் வெளியில் போவார்களா?"

"நாட்டுப்பெண்ணுக்குப் பரிந்துகொண்டு வருகிறாயாக்கும்?"

பதிலில்லை.

"உனக்குத் துப்பில்லை. நான் தவறாமல் வெளியே போய்த்தான் தீர வேண்டுமோ?"

"அதை நான் எப்படித் தடுக்க முடியும், சுதா?"

"ஏன் முடியாது?"

"என்னைப் பொல்லாத பெயர் வாங்கிக் கட்டிக் கொள்ளச் சொல்கிறாயா? எனக்கு இன்னும் மூன்று பிள்ளைகள் கல்யாணத்துக்கு இருக்கிறார்களே!"

'சரியான பயந்தாங்கொள்ளி' என்று வெளிப்படையாகச் சொன்னபோதிலும் உள்ளூற 'அண்ணனும் மன்னியும் இணையும் வெளியே செல்வது அம்மாவுக்கும் பிடிக்கத்தான் இல்லை. பொல்லாப் பெயர் வந்துவிடக் கூடாதே என்றுதான் சும்மா இருக்கிறாள்' என்று அறிய ஆறுதலாக இருக்கிறது.

"அம்மா! இன்று மாமல்லபுரம் போகலாம் என்று இருக்கிறோம்."

"அவள் தும்மிக்கொண்டே இருக்கிறாள் போலிருக்கிறதே!"

இதைக் கேட்டதும் சுதாவின் உள்ளம் குளிர்கிறது.

"அதனாலென்ன அம்மா? பரவாயில்லை" என்கிறான் சந்துரு அவசரமாக.

"சரி..." வழக்கம் போல் இழுக்கிறாள் அம்மா.

'ஐயோ, அசட்டு அம்மாவே!' உள்ளம் குமைகிறது சுதாவுக்கு.

"ஏதாவது டிபன்... அங்கே போய்ச் சாப்பிட...." சந்துரு சொல்லி முடிக்கவில்லை.

"அங்கே எத்தனையோ தோட்டங்கள் இருக்கின்றன. வீணாக எங்களை வேலை வாங்காதே!" என்று கூறி விடுகிறாள் சுதா.

தங்கையின் பக்கம் வெடுக்கென்று திரும்புகிறான் சந்துரு. அந்தப் பார்வையின் வெம்மையைத் தாங்கிக்கொள்ள இயலாமல் தவிக்கிறாள் சுதா. சந்துரு எழுந்து போய்விடுகிறான்.

அடுத்த ஒரு மணி நேரத்தில் சந்துருவையும் பூரணியையும் சுமந்துகொண்டு ஸ்கூட்டர் மாமல்லபுரத்தை நோக்கிப் பறந்து விடுகிறது.

"அம்மா! நேற்று வந்தவள் அண்ணாவை எப்படி மாற்றிவிட்டாள், பார்த்தாயா? 'நீயும் வருகிறாயா சுதா?' என்று ஒரு வார்த்தைகூட அண்ணா என்னிடம் கேட்கவில்லை..." தாயாரிடம் வந்து நின்று விம்முகிறாள் சுதா.

"நீதான் எத்தனையோ தடவை போயிருக்கிறாயே..." மகளைச் சமாதானப்படுத்த முயல்கிறாள் கற்பகம்.

"அவள் மட்டும் போகவில்லையோ?"

"அவளுக்காகவா போகிறான்! பைத்தியம், போய்க் குளித்துவிட்டுச் சாப்பிட வா!" என்கிறது தாய்மை பரிவு பொங்க.

"எனக்கு ஓர் இழவும் வேண்டாம்..." படுக்கையில் போய்ப் 'பொத்'தென்று விழுகிறாள் சுதா. அவளுக்கு இதயமே வெடித்து விடும்போலிருக்கிறது. 'நீயும் வாயேன், சுதா!' என்று ஒரு வார்த்தை அண்ணாவுக்குக் கேட்கத் தோன்றவில்லையே! எப்படி மாறி விட்டான், இரண்டே மாதங்களில்! புதிய உறவின் களிப்பு மிகுந்த கவர்ச்சியில் பழைய உறவுகளின் பாசம் கூடவா பறி போய்விடும்? 'சுதாக்குட்டி', 'சுதாக்குட்டி' என்று சந்திச்



சுற்றி வந்த சந்துருவா இவன்? இந்த லட்சணத்தில் 'எனக்கு இப்போது கல்யாணமே வேண்டாம். சுதாக்குட்டிக்குக் கல்யாணம் ஆன பிறகுதான் எனக்கு' என்று ஒரே பிடிவாதமாக மறுத்தவன் வேறு!

அம்மாதான் 'பெண்ணும் நன்றாக இருக்கிறாள். நல்ல குடும்பமாகவும் இருக்கிறது. சீர் வகையறாக்களும் கேட்டபடி செய்வதாகச் சொல்கிறார்கள். சுதாவுக்கு என்ன, கூடிய சீக்கிரம் செய்துவிட்டால் போயிற்று. உன்னை விட ஆறு ஏழு வயசு சின்னவள்தானே அவள்!' என்றெல்லாம் விதரணையாகப் பேசிக் கல்யாணத்துக்குச் சம்மதிக்க வைத்துவிட்டாள் மகனை. கல்யாணத்தையே தள்ளி வைக்கச் சொன்னவன்தான், இப்போது கல்யாணமானவுடன் மனைவியை இழுத்துக்கொண்டு நாள் தவறாமல் ஊர் சுற்றுகிறான். என்ன அண்ணா இவன்! சுதாவின் உள்ளம் பொருமுகிறது. திருமணம் மனிதனை இப்படியா மாற்றிவிடும்? உடன் பிறந்தவளைவிட மனைவி உயர்ந்தவள்தானா? அதுதான் உண்மை என்றால் அது உடன் பிறந்த பாசத்துக்கே இழுக்கல்லவா?

ஆறு மாதங்கள் விரைந்தோடுகின்றன.

சந்துருவின் பகீரத முயற்சி வெற்றி பெறுகிறது. சுதாவின் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறுகிறது.

பத்து நாட்கள் விடுமுறையுடன் வேட்டகத்தில் வந்து தங்குகிறான் சுதாவின் கணவன் கணேஷ்.

முன் ஹாலில் சந்துருவும் கணேஷும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள். கையில் காப்பியும் இதழ்களில் இள நகையுமாக அங்கே வருகிறாள் சுதா. அண்ணனிடம் ஒன்றைக் கொடுத்துவிட்டு, கணவனிடம் ஒன்றைத் தருகிறாள்.

'அமுதும் தேனும் எதற்கு... நீ அருகினில் இருக்கையிலே எனக்கு' என்று பாடுகிறான் சந்துரு பரிகாசமாக.

முகம் செவ்வரளியாகச் சிவக்க உள்ளே ஓடி விடுகிறாள் சுதா.

'டூத் பிரஷ்'ஷில் பற்பசையை வடித்துக் கொண்டிருக்கிறாள் சுதா.

'கன்னத்தில் என்னடி காயம்....?' என்றபடியே அங்கே வந்த பூரணி, நாத்தனாரின் கன்னத்தை நிமிண்டுகிறாள்.

'அது வண்ணக் கிளி செய்த மாயம்...' என்று அவள் முகத்தருகில் தன் முகத்தைக் கொண்டு வந்து கண்ணைச் சிமிட்டுகிறான் சந்துரு.

சுதாவின் உள்ளத்தில் யாரோ மலர்ச் செண்டால் ஓங்கி ஓங்கி அடிப்பது போலிருக்கிறது. அதை மறைக்க, ''போ, அண்ணா!'' என்றபடியே குழாயடிக்கு ஓடுகிறாள்.

சுதா குளித்து முடித்துப் புத்தம் புது மலராக, எதிரே வருகிறாள்.

''பத்து மணிக்குக் கார் வந்துவிடும். அதற்குள் தயாராகி விடவேண்டும்'' என்று பாசம் பொங்கும் குரலில் சொல்கிறான் சந்துரு.

''எங்கே?'' என்று புரியாமல் கேட்கிறாள் சுதா.

''மாமல்லபுரத்துக்கு. கணேஷ் தயார். நீதான் லேட்... ம்... சீக்கிரம்....'' அன்பு அவசரமாகப் பெருக்கெடுத்துப் பாய்கிறது.

''நீயும் உன் மிஸஸும்...'' என்று இழுக்கிறான் புது மாப்பிள்ளை கணேஷ்.

''நோ! நோ! பூஜை வேளையில் கரடி எதற்கு?'' என்கிறான், சந்துரு சிரித்துக் கொண்டே.

''டிரைவர் வருகிறாரல்லவா?'' என்று கேலியாகக் கேட்கிறான், கணேஷ்.

''வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். எதற்கு அவர் ஒரு தடை. உனக்குத்தான் லைசென்ஸ் இருக்கிறதே!'' என்ற சந்துரு, உட்பக்கம் பார்த்து, ''பூரணி!'' என்று குரல் கொடுக்கிறான்.

''இதோ வந்துவிட்டேன்...'' என்று சொல்லியபடியே வந்த பூரணி இரண்டு பிளாஸ்டிக் கூடைகளைச் சுதாவின் அருகில் வைக்கிறாள். கம்மென்று சித்திரான்னங்களின் மணம் அந்த அறை முழுதும் பரவுகிறது.

''பிளாஸ்கில் காப்பியும் இருக்கிறது. கூஜாவில் தண்ணீரும் இருக்கிறது'' — சொல்லிக்கொண்டே வருகிறாள் பூரணி உற்சாகம் பொங்க.

சிலையாக நின்றிருந்த சுதாவின் உள்ளம் குலுங்கி விழுகிறது. 'அங்கே எத்தனையோ ஹோட்டல்கள் இருக்கின்றன. வீணாக எங்களை வேலை வாங்காதே?' என்ற வார்த்தை தயிரைக் கடையும் மத்தாக அவள் உள்ளத்தைச் சிலுப்புகிறது.

''மாமல்லபுரத்தில் நிற்கும் சிலைகளைப் பார்க்கப் போ என்றால் நீயே சிலையாய் நின்றுவிட்டாயே, சுதா! கிளம்பும்மா...'' என்கிறான் சந்துரு உரத்த குரலில்.

அவள் நடக்கிறாள். இருவரும் காரில் ஏறி அமர்ந்து, கார் புறப்பட்டுத் தெருவின் திருப்பத்தில் மறைகிற வரையில் கைகளை அசைத்தபடியே வாசலில் நிற்கிறார்கள் சந்துருவும் பூரணியும். 'ஆனால் நான்...?' யாரும் இப்படிக் கேட்டுவிடவில்லை. சுதாவின் மனச்சாட்சிதான் கேட்கிறது அப்படி.

கணவனின் 'பாண்டு'க்கு இஸ்திரி போட்டுக் கொண்டிருந்தாள் சுதா.

''ஓ! சுதா!...'' என்று அழைக்கிறாள் கற்பகம், தட்டில் போண்டாவை எடுத்து வைத்துக் கொண்டு.

''இப்படிக் கொடேன்... நான் கொண்டு போய்க் கொடுக்கிறேன்'' என்று கையை நீட்டுகிறான் சந்துரு.

''வேண்டாம். அவளே கொண்டு போய்க் கொடுக்கட்டும்'' என்கிறாள் கற்பகம்.

அம்மாவின் அழைப்பை ஏற்றுக்கொண்டு வந்த சுதா, டிபன் தட்டை வாங்கிக்கொள்கிறாள். கணவனுக்குத் தன் கையால் டிபன் எடுத்துக் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும் என்கிற தாபத்துடன் பூரணி வந்து நிற்பதும், அம்மா டிபனை அவளிடம் கொடுத்து அனுப்பாமல் தானே எடுத்துக் கொண்டு போவதும், பூரணி முகம் துவளப் பக்கத்து அறைக்குள் போய் வேலைக்காரியுடன் பேச்சுக் கொடுப்பதும் இப்போதுதான் நடப்பது

போல் அவள்கண் முன்னும் விரிந்தன. அன்று உண்மையையே வெகுவாகப் பார்த்து ரசித்த மனம், இன்று கற்பனையில்கூட நினைத்துப் பார்க்கவே கூசியது. 'இந்த அம்மாவுக்குப் பெண் தன் கணவனுடன் குலாவியபடி டிபன் கொடுத்து உபசரிக்க வேண்டுமென்று ஆசைப்படத் தெரிவது போல் மகனும் தன் மனைவியுடன் சல்லாபிக்க வேண்டும் என்று ஏன் ஆசைப்படத் தெரியவில்லை?' என்று அங்கலாய்க்கிறது. 'அம்மாவைச் சொல்கிறாயே! நீமட்டும் ஒழுங்கோ?' என்று உள் மனம் அவளைச் சாடியது. பதறும் உள்ளம் பாரமாய்க் கனக்கக் கணவன் இருந்த அறையை நோக்கிச் செல்கிறாள் சுதா.

முதல் வகுப்புப் பெட்டியில் உட்கார்ந்திருக்கிறார்கள் கணேஷும் சுதாவும்.

"நீங்கள் இருவரும் இல்லாமல் வீடே வெறிச் சென்றிருக்கும் இனிமேல்." சந்துருவின் கண் கலங்குகிறது.

"சுதா!" பூரணியும் விழிகளைத் துடைத்துக்கொள்கிறாள்.

"தீபாவளிக்குத்தான் வரப்போகிறோமே?" என்கிறாள் சுதா. அவளுக்கும் குரல் தழுதழுக்கிறது.

"சுதா! இங்கே பிறந்தகத்தில் இருப்பதற்கும் புக்ககத்தில் இருப்பதற்கும் ரொம்ப வித்தியாசமாக இருக்கும். நீங்கள் இருவரும் ஒரு இடத்துக்குப் போகவும் வரவுமாக இருப்பதைப் பார்த்து நாங்கள் சந்தோஷப்படுகிற மாதிரி அங்கே எல்லோருக்கும்....அதாவது...."

"புரிகிறது மன்னி!"

"அதையெல்லாம் பொருட்படுத்தவோ—மனம் தளர்ந்துவிடவோ கூடாது. அவரைச் சந்தோஷப்படுத்துவதும் நம் கடமைதான்." மேலே சொல்லத் தயங்கினாள் பூரணி.

"மன்னி! இத்தனை நாட்களாக நானும் ஒரு நாத்தனாராகத்தான் இருந்துவிட்டேன். ஒரு தங்கையாக இருக்கத் தவறி விட்டேன்" என்ற சுதா பூரணியின் கையை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொள்கிறாள். பூரணியின் கை ஈரமாகிறது. அந்தக் கையாலேயே சுதாவின் கண்களைத் துடைத்து விடுகிறாள் பூரணி.

சந்துரு தங்கையின் கையைப் பற்றிக் கொள்கிறான். இதழ்கள் துடிக்கின்றன. ஏதோ பேச முயல்கிறான். முடியாமல் தடுமாறுகிறான். கைகள் கைகளைப் பாசம் மிகுதியால் இறுக்கிப் பிடிக்கின்றன. இமைக்கும் நேரம்தான். பிறகு கையை விடுவித்துக் கொண்டு மனைவியிடம் 'வா' என்பதுபோல் தலையை அசைத்துக் கொண்டே ரயிலை விட்டுக் கீழே இறங்கிவிடுகிறான்.

ரயில் நகருகிறது.

நான்கு கைகள் ஆடியவண்ணமே விடை தருகின்றன.

கண்களைத் துடைத்துக் கொள்கிறாள் சுதா.

"நான் இங்கே பத்து நாட்கள் தங்கியதற்குச் சந்துருவுக்கு ஏகப்பட்ட ரூபாய்கள் செலவு, சுதா. நானும் இரண்டு சகோதரிகளுக்குத் தம்பிதான். இருந்தாலும் இப்படிப் பாசத்தை வெளிப்படையாகச் சொல்ல எனக்குத் தெரிந்ததில்லை. நான் ரொம்பவும் அதிர்ஷ்டசாலி...." என்கிறான் கணேஷ் உணர்ச்சி மேலிட.

"அண்ணனையும் மன்னியையும் நம்ப ஊருக்கு வரவழைத்துப் பத்து நாட்கள் வைத்துக் கொள்ள வேண்டும்..." என்ற சுதாவுக்குக் குரல் தடுமாறுகிறது.

"கண்டிப்பாக. எப்படி அவர்களைத் திக்குமுக்காட வைத்து விடுகிறேன், பார்!" என்கிறான் கணேஷ், கர்வம் பொங்க.

சுதா மனம் இலேசாகிவிட்ட பூரிப்பில் நிம்மதியாகப் பெருமூச்சு விடுகிறாள். 'அந்தந்த உணர்வுக்கு அந்தந்த உறவு தனித்தன்மையானது. அதில் மற்றவர்களுக்கு இடமில்லை. அது அவரவர்களின் தனி உலகம்' என்பதைப் புரிந்து கொண்டுவிட்டதால் ஏற்பட்ட நிம்மதி.

## இராட்சதப் பல்லி!

உலகிலேயே மிகப் பெரிய பல்லி, பல்லி இனத்திலே விஷத்தை உடைய ஒரே பல்லி இந்த ராட்சதப் பல்லி. அமெரிக்காவிலும், மெக்ஸிகோவிலும் மட்டுமே காணப்படுகிறது. வெப்பமான சூழ்நிலைகளில் பாறைகளுக்கு அடியிலும், பொந்துகளிலும் இந்தப் பல்லி வசிக்கிறது. இது இரவிலேதான் வெளியே வந்து இரை தேடும். முட்டைகள், எலிகள், சிறு பல்லிகள் ஆகியவை இதற்கு உணவாகும். இது சுமார் இரண்டு அடி நீளம் வளரும்.

இந்தப் பல்லி சில நாட்கள் பொந்தை விட்டு வெளியே வராமல், இரை தேடாமல் செத்துவிட்டதோ என்று நாம் எண்ணும்படியாக மயக்கமானதொரு தூக்க நிலையில் ஆழ்ந்திருக்கும். அந்தச் சமயத்தில் இதன் வாலில் ஏற்கனவே சேர்த்து வைக்கப்பட்டிருக்கும் கொழுப்புப் பொருள் கரைந்து, இதன் உடலில் கலந்து, இதற்குச் சக்தியைக் கொடுக்கும். ஆகவே, இதனுடைய வால் தூக்க நிலைக்கு உள்ளாவதற்கு முன்பு தடிப்பாகக்



காணப்படும். இதன் செதில்களில் மஞ்சள் ஆரஞ்சு நிறப் புள்ளிகள் உண்டு. பளபளக்கும் இந்தப் புள்ளிகள் இதனை எளிதில் நமக்குக் காட்டிக் கொடுத்து விடும்.

விஷத்தை உற்பத்தி பண்ணுகிற சுரப்பி உமிழ் நீரை உருவாக்கும் சுரப்பிக்கருகே அமைந்துள்ளது. ஆனால் இதன் உதடு, தாடை, பற்கள் முதலானவற்றின் விநோத அமைப்பு காரணமாக இந்தப் பல்லி கடித்தாலும், அதனால் ஏற்படும் காயத்தினுள், விஷம் எளிதில் இறங்கி விடாது. எனவே, பயப்படத் தேவையில்லை.

இந்தப் பல்லி தன் பழக்கவழக்கங்களில் சோம்பேறித்தனமாயிருக்கும். தன் தலையை முறுக்கிக் கொள்ளும் இயல்பை உடையது. மின்னல் வேகத்தில் கடித்து விடும். இராட்சதப் பல்லி, தகுந்த பிடிமானம் கிடைத்தால் உறுதியாகப் பற்றிக் கொண்டு, கீழே விழுந்து விடாதபடி தொங்கிக் கொண்டு இருக்கும். அதற்குத் தகுந்தவாறு இதன் கால்களில் உள்ள கூர்மையான நகங்கள் துணை புரிகின்றன.

— எஸ். சாரதாம்பாள்

# உட்புறங்களுக்கும், வெளிப்புறங்களுக்கும் ஈடிணையற்ற அழகிற்கும், நிரந்தரத்தன்மைக்கும்...

ஸில்விக்ரீட்

ஏஸிஸி வெள்ளை சிமெண்ட்



ஸில்விக்ரீட் ஏஸிஸி வெள்ளை சிமெண்டை கண்கவர் பாணிகளிலும், வண்ணங்களிலும் அமைத்துக் கொள்ளலாம்: அதைக் கொண்டு டெகோரேடிவ் பேனல்களையும், டைல் அல்லது டெர்ராஸோ தளங்களையும், தூண்களையும், கொடிவீடுகளையும் சுலபமாக அமைத்துக் கொள்ளலாம்.

அசல் போர்ட்லாந்து சிமெண்டின் உறுதியும், நீடித்து நிற்கும் தன்மையும் உடையதாக இருப்பதனால், அது நிரந்தரமானதாக விளங்குகிறது.

ஸில்விக்ரீட் எவ்வளவு வேண்டுமானாலும், அருகிலுள்ள சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட் கிளையிலோ, அவர்களுடைய விநியோகஸ்தர்களிடமோ கிடைக்கிறது

ஸ்னோஸெம் மற்றும் கலர்க்ரீட்டின் தயாரிப்பில் மூலப் பொருளாக இருப்பது ஸில்விக்ரீட்.

**ஏஸிஸி** தரத்தில் உயர்ந்த தயாரிப்புகளுக்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

**தி அஸோஸியேட்டட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்**

தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

## திருமணங்கள் ரயில்களால் நிச்சயிக்கப் படுகின்றன.

குஜராத் மாநிலத்தில் திருமண கோஷ்டியினர் சென்றுகொண்டிருந்த ஒரு பிரயாணிகள் பஸ் ரயிலுடன் மோதியதில் மணமகள் உள்பட நாற்பதுக்கும் மேலான நபர்கள் உயிர் இழந்தார்கள். - செய்தி

ஆந்திர மாநிலத்தில் உள்ள அனந்தபூர் அருகே திருமண கோஷ்டி ஒன்று பிரயாணம் செய்த பஸ் வேகமாக ஓடிக் கொண்டிருந்த கூட்ஸ் ரயில்மீது மோதியது. மோதிய வேகத்தில் பஸ் சிறிது தொலைவுக்கு அப்பால் தூக்கி எறியப்பட்டது. அனைவரும் காயமின்றித் தப்பினார்கள். — செய்தி

## தாத்தா சொல்லும் ஃபாஷன் கதை

“என் பேரன் ஈசன் ஐ. ஏ. எஸ். வந்தான். (பரமேசுவரனின் சுருக்கம்) “தாத்தா! என்கூட காரில் பீச்சுக்கு வர ஆசையாயிருந்தா நீங்க உங்கள் டிரஸ்ஸிலே கவனம் செலுத்தணும். ஸூட் பாண்ட் போட்டுப் பழகுங்கோ” என்று சொல்லி ஒரு பொட்டலத்தை வச்சுட்டுப் போனான். கொஞ்ச நேரம் கழித்து என் டாக்டர் பேத்தி குந்தா வந்தாள். (சகுந்தலாவின் தேய்வு) “கிராண்ட் பா! இது வீட்டு. என்கூட நீங்க வெளியே புறப்படணும்னா ஃபாஷனா இருக்கணும். இந்தப் பாக்கெட் வாட்ச் பழங்கால ஷர்ட் டெல்லாம் குழிதோண்டிப் புதைச்சிட்டுக் கொடுத்துடணும். இந்த டார்ட்டான்ஸ் நெக் பெரி காட்டன் ஷர்ட் போட்டுப் பழகுங்கோ” என்று சொல்லி ஒரு பொட்டலத்தை வச்சுட்டுப் போனா. ஆமைக்கழுத்துச் சட்டையாம். இவைகளையெல்லாம் மாட்டிண்டு கண்ணாடி முன்னாலே போய் நின்றேன். பிரமித்துப்போனேன். 'வொண்டர்புல்!', 'மார்வெலஸ்!' என்ற குரல்கள் பக்கத்திலே கேட்டன. ஈசனும் குந்தாவும் ஆச்சர்யப்பட்டு நின்றார்கள்.

“குழந்தைகளா! நீங்கள் என்கூட வெளியே ரொம்ப ஆசைப்பட்டா உங்க நடை உடை பாவனைகளையெல்லாம் மாத்திக்கணும். உங்களுக்கு ஃபாஷன் போதாது. வெள்ளை பைஜாமா மஞ்சளோ சிவப்போ ஜிப்பா, கலைந்த தலை, ருத்திராட்சம், தோளிலே பை இதெல்லாம் போட்டுக்கணும்” என்றேன். அவர்கள் பதில் சொல்லாமல் மௌனமாக நின்றார்கள்.

ஒரு மாசமாக சலூன் பக்கம் போகாத என் தாடி, தலை, வைட் பான்ட்ஸ், ஆமைக் கழுத்துச் சட்டை, அதன் மேல் தொங்கும் ருத்திராட்சம் எல்லாம் சேர்ந்த நான் ஒரு சீனியர் 'ஹிப்பி'.

## கொரிக்கவும் சிரிக்கவும்

## போர் வேண்டாம் போர்

“டாக்டர்! தனக்குத் தானே பேசிக் கொள்ளும் வியாதி என்னிடம் அதிகமாகி விட்டதோ என்று நான் அஞ்சுகிறேன். வீட்டிலும் காரியாலயத்திலும், ரயிலிலும், பஸ்ஸிலும் நான் என்னிடமே இரைந்து பேசிக் கொள்ள ஆரம்பித்து விட்டேன்! நீங்கதான்......”

“இது ஒரு வியாதியே இல்லை! அசாதாரண சுபாவம்; அவ்வளவுதான். நாளடைவில் நீங்கள் இரைந்து பேசுவது குறைந்துவிடும்.”

“குறைய வேண்டாம், டாக்டர்! இப்போ நான் பேசுவது எனக்கே 'போர்' அடிக்கிறது. இதே பேச்சு சுவையாக இருப்பதற்கு நீங்கள் உதவினால் போதும்!”

## ஹனுமபக்த ராமன்!

நவாப் ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள் ஹனுமான் வேடத்தில் தோன்றி மேடையில் அமர்க்களமாக நடித்துக் கொண்டிருந்தார். நாடகம் முடிந்ததும் மேடைக்குப் பின்புறமாக அவரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தேன். வேடத்தைக்கூடக் கலையாமல் அவர் பேசிக் கொண்டிருந்தார். ராமன் வேடம் போட்டிருந்த பாலகன் அப்படியே எங்கள் இருவருக்கும் விசிறிக் கொண்டிருந்தான்.

"நீங்கள் கொடுத்து வைத்த பாக்கியவான். நூற்றுக்கணக்கான சிறுவர்களுக்கு வாழ்வு அளிக்கிறீர்கள். தூய கதர் கட்டும் காந்தியவாதி. மேடையில் மகாபக்த சிரோமணியான ஆஞ்சநேயராகத் தோன்றுகிறீர்கள்" என்று பாராட்டினேன்.

நவாப் அவர்களின் முகம் கண்டியது. "வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறீங்க? இதோ விசிறுகிறானே, ராமன் வேஷம் போடும் பையன், நேற்று காலையிலே ஒரு கடிகாரத்தைத் திருடி விட்டான். அவனை வெகுவாகக் கண்டித்தேன். ராத்திரி என்னடான்னு அவன் காலடியிலே நான் கரம் கூப்பி உட்கார்ந்தேன். இது தான் வாழ்க்கையும் வேஷமும்" என்றார். நான் பிரமித்துப் போனேன்.

(விராடபுரியில் பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் மேற்கொள்ளப் போகும் சம்பவத்துக்கு ஓர் உதாரணமாக வாரியார் அவர்கள் கூறியது.)



## பட்டுமாமா-சிட்டுமாமி!

"பத்திரிகைகளில் எல்லாம் என் படம் வந்திருக்கே! பார்த்தாயா?"

"பிரமாதம்! சினிமாக் கொட்டகையிலே டிக்கட் கிடைக்காம திரும்பற கூட்டத்திலே ரொம்ப அழகாகத்தான் மாட்டிக் கொண்டு அசட்டு முழி முழிக்கிறீர்கள்!"



கோமதி சுவாமிநாதன்

## சில வெளிநாட்டு 'அறிவிப்பு' ரகங்கள்



தயவுசெய்து இங்கே புகை பிடிக்காதீர்கள். உங்கள் மதிப்பு பைசா பெறுமல் இருக்கலாம். ஆனல் எங்கள் பெட்ரோல் விலை மதிப்பில் உயர்ந்தது.

- ஒரு பெட்ரோல் பங்க் அறிவிப்பு

பைத்தியக்கார விடுதிகளுக்குத் தாராளமாக நிதி உதவி செய்யுங்கள். இல்லையேல் உங்கள் மென்னியைப் பிடித்துவிடுவேன்.



- ரயில் நிலையம் ஒன்றில் தொங்கும் அறிவிப்பு

அச்சுதனைக் கண்டதும் அந்த வீட்டிலுள்ள அனைவரும் ஆனந்தக் கூத்தாடினர்! அனைவரும் என்றால் அந்த வீட்டு மாமி, அவள் மூத்த பெண் பிரபுல்லா, அவள் தங்கைகள், தம்பிகள்....

''வாப்பா, அச்சுதா! செளக்கியமா இருக்கியா? எங்கே இருக்கே? படிக்கிறியா, வேலையிலே இருக்கியா?...'' என்று மூச்சு விடாமல் குசலம் விசாரித்தாள் பிரபுல்லாவின் அம்மா.

''செளக்கியம்தான் மாமி. பி. ஏ. படிச்சுட்டு ஒரு கம்பெனியிலே வேலை பார்க்கிறேன். அதோட....'' மேற்கொண்டு அவன் சொல்லி முடிப்பதற்குள் வேறு ஏதோ கேள்வியைப் போட்டாள். மாமியின் கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தானே தவிர, அச்சுதனின் பார்வை எண்ணமெல்லாம் பிரபுல்லாவையே வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

அவள்தான் எவ்வளவு அழகாக வளர்ந்து விட்டாள்! பிரபுல்லா நல்ல அழகி என்பதும் இப்பொழுது இன்னும் அழகாக வளர்ந்திருப்பாள் என்பதும் அவனுக்குத் தெரிந்த விஷயம்தான். இருந்தாலும் இப்படிப் பிரமிக்க வைக்கும் வகையில் அவள் வடிவமும் வனப்பும் செழித்திருக்குமென்று அவன் எதிர்பார்க்கவில்லை. முதலில் ஓரக்கண்ணால் நாசூக்காக அவளைப் பார்த்தவன் பிறகு நேரிடையாகவே அவளைப் பார்த்துப் பேச்சுக் கொடுத்தான்.

''படிக்கிறியா பிரபுல்லா?'' என்று கேட்டான்.

''ஹைஸ்கூல் படிப்பை முடித்துவிட்டு அடுப்பங்கரைக் காலேஜிலே சேர்ந்திருக்கேன்...'' என்றாள் பிரபுல்லா.

''பரவாயில்லையே! அப்போ கவையாகச் சமைப்பேன்னு சொல்லு?''

''ஓ! நேற்றுக்கூட அப்பா நான் செய்த முருங்கைக்காய்ச் சாம்பாரைச் சாப்பிடும் போது, 'பேஷாயிருக்கே, இது என்ன கூட்டு? உப்புப் போட்டிருந்தால் இன்னும்கூட ருசியாயிருக்கும்' அப்படின்னார்!'' என்றாள் பிரபுல்லா. எல்லோரும் சிரித்தனர்.

பிரபுல்லாவின் அம்மா அச்சுதனையும் அவளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். அச்சுதனின் கம்பீரமான தோற்றமும் ஒட்டுதலான சுபாவமும் அவளை வெகுவாகக் கவர்ந்து விட்டன. பி.ஏ. படித்துவிட்டு வேலையில் இருப்பதாகவும் கூறியபிறகு அவனைச் சும்மா விட்டுவிடலாவது! அவள் சிந்தையில் எண்ணங்கள் ஓடிக் கொண்டிருந்தன.

''அப்பா எங்கே பிரபுல்லா?'' என்று வினவினான் அச்சுதன்.

''மார்க்கெட்டுக்குப் போயிருக்கார்; இப்ப வந்துடுவார்...'' என்றாள்.

''பிரபு! அச்சுதனோடு பேசிண்டிரு. காப்பி கலந்துண்டு வர்றேன்'' என்று கூறிவிட்டு உள்ளே சென்றாள் அவள் அம்மா.

''பிரபுல்லா! நீ நிறையச் சினிமா பார்ப்பதுண்டா?...'' என்று கேட்டான் அச்சுதன்.

''எப்பவாவது பார்ப்பேன்... அதுவும் அப்பா ஊரில் இல்லாத சமயம் பார்த்துப் போகணும்!...'' என்ற பிரபுல்லாவின் குரலில், நிறையப் பார்க்கமுடியவில்லையே என்ற குறை தெரிந்தது.

''நீங்கள் நிறையப் பார்ப்பதுண்டா?''-என்றாள் பிரபுல்லா.

''ஒரு படம் விட மாட்டேன்! இப்ப நானே, இரண்டு படங்களில் நடிச்சிண்டிருக்கேன் தெரியுமோ?'' என்று சிறிது பெருமையோடு சொன்னான்.

''நிஜம்மாவா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் பிரபுல்லா. அவளிடம் அவனுக்கு இருந்த மதிப்பு ஆயிரம் மடங்கு உயர்ந்தது. மேற்கொண்டு அவள் ஏதோ கேட்க நினைத்தாள். அதற்குள் அவள் தந்தை மார்க்கெட்டிலிருந்து திரும்பி வந்து விட்டார். அச்சுதனைப் பார்த்துவிட்டு ஒரு கணம் தயங்கினார். பிறகு ''யாரு?... அச்சுதன்தானே?'' என்றார்.

''ஆமாம், மாமா!...'' என்று கூறியவாறு எழுந்தான்.

''உட்காரு... எப்ப வந்தே?...'' என்றவாறு அவரும் அமர்ந்தார்.

''கும்பகோணத்துக்கு ஒரு காரியமா வந்தேன்... அப்படியே உங்களையெல்லாம் பார்த்துட்டுப் போகலாம்னு...'' என்று ஒரு பொய்யைச் சொன்னான். உண்மையில் அவன் தஞ்சாவூரில்தான் வந்து இறங்கினான். பிர




புல்லாவைப் பார்க்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே அவன் இந்தப் பிரயாணத்தை மேற்கொண்டான்.

தஞ்சைதான் அவன் பிறந்து வளர்ந்த ஊர். ஹைஸ்கூல் படிப்பு வரை அங்குதான் படித்தான். பிறகு அவனுடைய குடும்பம் சென்னைக்குப் போய்விட்டது. தஞ்சையில் இருக்கும்வரை பிரபுல்லாவின் வீட்டுக்கு நாலு வீடுகள் தள்ளி இருந்தது அவன் வீடு. அப்பொழுதெல்லாம் அவன் வீட்டுக்கு அடிக்கடி வந்து போவான். இரண்டு குடும்பங்களுக்கும் அவ்வளவு நெருங்கிய தொடர்புண்டு. இப்பொழுது அவன் சென்னைக்குப் போய் ஏழு வருஷங்கள் ஆகின்றன.



''அம்மாவிடம் சொல்லி நல்ல சமையலா செய்யச் சொல்லு...'' என்றார் பிரபுல்லாவைப் பார்த்து அவள் தந்தை. பிறகு அச்சுதனைப் பார்த்து விசாரிக்கத் தொடங்கினார்.

''இப்ப என்ன செய்யறே அச்சுதா?'' என்று கேட்டார்.

''ஒரு கம்பெனியிலே இரண்டு வருஷங்களா வேலை பார்க்கிறேன்....''

சம்பளம்?''

''கிட்டத்தட்ட நானூறு வருகிறது.''

''பேஷ்!''

''அதோட....''

''மேலே ஏதாவது படிக்கிறியா?''

'' இல்லே... உங்களுக்குத் தெரிந்திருக்கும்னு நினைக்கிறேன்; நான் இங்கே படிக்கும்போது ஸ்கூல் நாடகங்களில் பரிசுகள் வாங்கிய விஷயம்...'' என்றான்.

''அப்படியா? எனக்கு ஞாபகம் இல்லே'' என்றார்.

''சென்னைக்குச் சென்றதும் பல அமெச்சூர் நாடகங்களிலே நடித்து நல்ல பெயர் எடுத்தேன். இப்போ இரண்டு படங்களில்கூட நடித்துக் கொண்டிருக்கிறேன். முதல் படம் அடுத்த மாதம் ரிலீஸ் ஆகிறது. இந்தப் படத்திலே எனக்கு நல்ல ரோல்... எனக்கு நல்ல எதிர்காலம் இருக்கும்னு பேசிக்கிறா'' என்றான்.

''படம்னு?... சினிமாப் படமா?''

''ஆமாம்!''

''சினிமாவிலே நடிக்கிறியா?''

''ம்....''

''சந்தோஷம். எப்படியாவது முன்னுக்கு வந்தால் சரி!'' என்றார்.

சாப்பிட்டுக் கொண்டிருக்கையில், ''கல்யாணம் எப்பச் செய்துக்கறதா உத்தேசம்?'' என்று கேட்டாள் பிரபுல்லாவின் அம்மா. பிறகு அச்சுதன் பதில் சொல்வதற்குள் ''டைம் வந்தால் தன்னால் நடக்கிறது'' என்றார் பிரபுல்லாவின் அப்பா. இந்தப்

பேச்சு இத்துடன் நின்றுவிடப் போகிறதே என்று அச்சுதனனுக்குக் கவலையாகி விட்டது.

"அது விஷயமாகத்தான் நான் இப்பொழுது வந்ததே." என்று கூறியவாறு ஜாடையாகப் பிரபுல்லாவைக் கவனித்தான் அச்சுதன். நாணத்தால் அவள் விழிகளை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

"கும்பகோணத்தில் பெண் பார்த்துட்டு வர்றேன்னு சொல்லு!" என்றார் பிரபுல்லாவின் அப்பா.

"பிரபுல்லாவைப் பார்த்துட்டு வரும்படி தான் அம்மா என்னை அனுப்பி வைத்தாள்" என்று நேரிடையாக விஷயத்துக்கு வந்தான்.

"உன்னைப் பார்த்ததும் நானே பிரபுல்லா விஷயமா உன்னிடம் பேசணும்னு ஆசைப் பட்டேன். ஆனு...." என்று இழுத்தாற் போல் நிறுத்தினார். மேற்கொண்டு என்ன சொல்லப் போகிறாரென்று அவர் முகத்தைப் பார்த்தான். ஒரு நிமிஷம் கழித்து "வருத்தப்படாதேப்பா; ஏதோ சினிமாவில் நடித்துக்கொண்டிருப்பதாகச் சொன்னியே... அது எனக்குக் கட்டோடு பிடிக்காத விஷயம்!" என்றார். அச்சுதனின் முகம் சட்டென்று மாறிவிட்டது. அப்புறம் அது விஷயமாகப் பேசாமல் பேச்சை வேறு திசையில் திருப்பினார். அவர் நடந்து கொண்ட தோரணை 'இனி பிரபுல்லாவைப் பற்றிப் பேசாதே!' என்று எச்சரிப்பதைப் போலிருந்தது. அவர் சுபாவம் அவனுக்கு நன்றாகத் தெரியும். மிகவும் கண்டிப்பானவர். அவர் ஒன்று நினைத்து விட்டால் பிறகு யாராலும் அதை மாற்ற முடியாது. எனவே அச்சுதனும் மேற்கொண்டு பிரபுல்லா விஷயமாக எதுவும் பேசாமல் விடைபெற்றான்.

அவன் புறப்படும் சமயம், "இன்னொரு நடை வாயேன்..." என்றாள் பிரபுல்லாவின் அம்மா. 'அவரிடம் நான் சொல்லிப் பார்க்கிறேன்' என்று ஜாடையாகக் கூறுவது போலிருந்தது அவள் சொன்ன விதம்.

"வர்றதும் போறதும் இலேசா இருக்கா?" என்றார் பிரபுல்லாவின் அப்பா.

அச்சுதன் போய்விட்டான்.

"வீடு தேடி வந்த வரனை விட்டுவிட்டீர்களே! அச்சுதனுக்கு என்ன குறைச்சல்?" என்று வருத்தப்பட்டாள் பிரபுல்லாவின் தாயார்.

"அச்சுதன் நல்ல பையன்தான்... ஆனு... அவன் புகுந்திருக்கும் உலகம் இருக்கே... வேண்டாம். அந்தப் பேச்சை விடு!" என்று கூறிவிட்டு அங்கு நிற்காமல் போய்விட்டார்.

அடுத்த மாதமே அச்சுதன் நடித்த முதல் படம் வெளியாயிற்று. அவன் நன்றாக நடித்திருப்பதாகக் கேள்விப்பட்டாள் பிரபுல்லா.

அடுத்த ஒருசில மாதங்களில் அவன் புகழ் ஓங்கத் தொடங்கியது. முக்கிய கதாபாத்திரங்களில் நடித்து நட்சத்திரப் பதவியை அடைந்து கொண்டிருந்தான்.

அச்சுதன் பிரபுல்லாவைப் பார்த்துவிட்டுச் சென்ற ஆறு மாதங்களுக்கெல்லாம் அவள் தந்தை காலமாகி விட்டார். பிரபுல்லாவுக்கு இளையவர்கள் மூன்று பேர் இருந்தனர். குடும்ப நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக்கொண்டு வந்தது. முடிவில் வீட்டை விட்டே அவர்கள் போய் விட்டனர்.

மதுரையில் பிரபுல்லாவின் மாமா ஒருவர் நல்ல நிலையில் இருந்தார். அவரிடம் தஞ்சம் புகுந்தார்கள். ஒருசில மாதங்கள் அவர் தம்மால் முடிந்த உதவிகளைச் செய்தார். பிறகு அவரும் கைவிட்டு விட்டார். பிரபுல்லா வேலை தேடி அலையாய் அலைந்தாள்.

அச்சுதனுக்கு ஒரு கடிதம் எழுதிப் பிரபுல்லாவை அவனுக்கு மணம் செய்து கொடுத்து விட்டால் தங்கள் கஷ்டம் தீர்ந்துவிடும் என்று நம்பினாள் பிரபுல்லாவின் தாயார். ஆனால் இதைப் பிரபுல்லா விரும்பவில்லை.

நான்கு வருடங்கள் சென்றுவிட்டன. அச்சுதன் இப்பொழுது உச்சாணிக் கிளையில் வீற்றிருந்தான். ஒரு புதுப் படத்தின் தொடக்க விழாவுக்குக் காமிராவை முடுக்கி வைக்க அவனை அழைத்திருந்தார்கள். மதுரையைச் சேர்ந்த ஒரு சௌராஷ்டிரர்தான் அந்தப் படத்தின் தயாரிப்பாளர். முழுக்க முழுக்க அவருடைய சொந்தப் பணத்தையே முதல் போட்டிருந்தார்!

புதுப் படத்தின் பூஜைக்கு வந்திருந்த அச்சுதன் அதில் கதாநாயகியாக நடிக்க வந்திருந்த பெண்ணைப் பார்த்துப் பிரமித்துப் போய் விட்டான்.

"பிரபுல்லா! நீயா?" என்று கேட்டான் வியப்புடன்.

"நான்தான். மேடை நடிகை திரையுலகுக்கு வந்திருக்கிறேன்!" என்று புன்னகை செய்தாள் பிரபுஸ்ரீ. அவள் பெயரை அப்படித்தான் விளம்பரம் செய்திருந்தார்கள்.

"மேடை நடிகையா? நீ எப்போது மேடை ஏறினாய்?" என்று ஒன்றும் புரியாமல் கேட்டான் அச்சுதன்.

"எல்லாம் பெரிய கதை!" என்று பெருமூச்சு விட்டாள். தங்களை நாலு பேர் கவனிப்பதைக் கண்டதும் பிரபுல்லாவை அழைத்துக்கொண்டு செட்டுக்கு வெளியில் போடப்பட்டிருந்த நாற்காலிகளுக்கு அழைத்து வந்தான்.

"அப்பா காலமான பிறகு ரொம்பக் கஷ்டமாகி விட்டது..."

"அப்பா காலமாகி விட்டாரா?"

"நாலு வருஷமாகி விட்டது. மதுரையில் போயிருந்தோம். வேலைக்காக யார் யார் காலிலோ விழுந்தேன். ஒன்றும் பயனில்லை. என் சிநேகிதி ஒருத்தி நாடகங்களில் நடிப்ப நாளும் ஒரு நாடகத்துக்கு முப்பது நாற்பது வாங்கித் தருவதாகச் சொன்னாள்... அம்மா உங்களுக்கு ஒரு கடிதம் எழுதலாம் என்று யோசனை சொன்னாள்..."

"ஏன் எழுதவில்லை?"

"நான்தான் எழுதமாட்டேன் என்றேன்."

"ஏன்?"

"எனக்காக வீடு தேடி வந்தீர்கள். அப்பொழுது உங்களைப் புறக்கணித்து விட்டு இப்பொழுது நீங்கள் மிகவும் உயர்ந்த நிலையில் இருக்கும்போது கடிதம் எழுதுவது என்றும்."

"உன் அப்பாதானே எனக்கு உன்னைக் கொடுக்க இஷ்டப்படலே? நீ புறக்கணிக்கவில்லையே!"

"இருந்தாலும்... நீங்கள் எங்கே? நான் எங்கே?... அதனால் நாடகங்களில் நடித்தேன். நாளுக்கு நாள் என் நடிப்பிலும் ஒரு பெருகு

# அற்புத சாதனை



லூர் ஐ க்ரீம் கண்ணின் கீழேயுள்ள கருவளையங்களையும்... சுருக்கங்களையும்... குழிகளையும் அகற்றி... உங்களுக்கு இளமை மிக்க தோற்றத்தைத் தருகிறது.



கண்ணின் கீழே உள்ள மென்மையான பகுதிகளுக்கென பிரத்யேகமாக உருவாக்கப் பட்டது. லூர் அளிக்கும், நம்ப முடியாத அளவுக்கு சக்தி வாய்ந்த தயாரிப்பு. உங்கள் சருமம் உடனடியாக ஏற்றுக் கொள்வதற் கேற்ப மென்மையும் மழ மழப்பும் கொண்ட களிம்பாகப் பதம் செய்யப்பட்ட, வளமை மிக்க, கருகருப்பாக இலங்கும் கூட்டுப் பொருள்களடங்கியது.

சருமத்தில் ஊடுருவிச் செயல் புரிந்து அது சருமத்தை ஆக்ஸிஜனேட் செய்வதன் மூலம், உங்கள் சரும உயிரணுக்களுக்குப் புத்துயிரளித்து அழகுமிகு இளமைத் தோற்றத்தை மீட்டளிக்கிறது. அதிசயிக்கத் தக்க வகையில் நாளுக்கு நாள் உங்கள் கண்களின் கீழுள்ள கருவளையங்கள் மறைந்து அருவருப்பான சுருக்கங்களும் குழிகளும் குறைந்து வருவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.




எல்லோரும் முதன் முதலாகக் கவனிப்பது உங்கள் கண்களையே—அவற்றைக் கவர்ச்சியாக வைத்திருக்கிறது லூர்

லூர் கெமிகல் கார்ப்பொரேஷன் 14, [illegible] ரோடு, பம்பாய்-31.

தென் இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள்:
விப்ரா (ஏஜன்ஸீஸ்) பிரைவேட் லிட்.
36, B-, மவுண்ட் ரோடு, சென்னை - 2

# கலாக்ஷேத்ரா

(நுண்கலைக் கல்லூரி)

ஸ்ரீமதி ருக்மிணி தேவி அவர்களின் நிர்வாகத்தின் கீழ்

பல சிறப்புவாய்ந்த கலைஞர்கள் வித்வான்கள் உதவியுடன் நடைபெறுகிறது

**சங்கீதம்:** சென்னை, பல்கலைக் கழகத்தின் சங்கீத சிரோமணி (நான்கு ஆண்டுகள் பயிற்சி) மற்றும் கலாக்ஷேத்ரா டிப்ளோமா வகுப்புகளான வாய்ப்பாட்டு, வீணை, கோட்டு வாத்தியம், வயலின் மிருதங்கம் முதலியன (ஐந்து ஆண்டுகள் பயிற்சி)

**நடனம்: கலாக்ஷேத்ரா டிப்ளோமா வகுப்புகள்**
**பரதநாட்டியம்** மற்றும் **கதகளி**
(ஐந்து ஆண்டுகள் பயிற்சி)

**ஓவியம்** மற்றும் **சித்திர வேலைகள்**
கலாக்ஷேத்ரா டிப்ளோமா வகுப்பு
(நான்கு ஆண்டுகள் பயிற்சி)

**பொதுக் கல்வி:** சென்னை, மெட்ரிகுலேஷன் பரீட்சைக்கும் அல்லது கலாக்ஷேத்ரா நுண்கலை போதனை முறைகளுடன் அடையாறு பெஸண்ட் தியாஸாபிகல் உயர்நிலைப்பள்ளி போதனை முறைகளும் இணைந்து அளிக்கப்படும்.

**கற்பிக்கப்படும் மொழிகள்:**
ஆங்கிலம், ஸம்ஸ்கிருதம், ஹிந்தி தமிழ், தெலுங்கு, மலையாளம்

நுண்கலைகளில்:
**போஸ்ட் கிராஜுவேட் பாடங்களும் விசேஷ உயர் போதனை வகுப்புகளும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன**

மாணவர்களுக்கும் பெண்களுக்கும் சிறுவர்களுக்கும் தனித்தனி ஹாஸ்டல் வசதிகள் உண்டு

**22-6-1970 முதல் மாணவ, மாணவிகள் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்**

விதிமுறைகள் வேண்டுவோர் ரூ. 3/- அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்

**சூபரின்டென்டென்ட் ஆப் ஸ்டடிஸ்**
**கலாக்ஷேத்ரா - சென்னை - 41**

எறிந்து. மாதத்தில் இரு பது நாடகங்களி லாவது நடிப்பேன். இந்தப் படத்தின் தயா ரிப்பாளர் என்னைப் பல நாடகங்களில் பார்த் திருக்கிறார். இப்பொழுது இவர் தயாரிக்கும் படத்தில் என்னையே முக்கிய பாகத்தை ஏற்று நடிக்கச் சொல்லி வாய்ப்புக் கொடுத் திருக்கிறார்...'' என்று தன் விருத்தாந் தத்தைக் கூறினான் பிரபுல்லா.

''கவலைப்படாதே. திரையுலகிலும் நீ பிர காசிப்பாய்'' என்று வாழ்த்தினான் அச்சுதன்.

நன்றியுடன் அவனைப் பார்த்தாள். பிறகு, ''இன்னும் திருமணமாகவில்லையே?'' என்றான்.

''இல்லை. என்றைக்காவது பிரபுல்லாவை மணக்கலாம் என்ற சபலத்தில் வேறு பெண் ணைப் பார்க்காமலே இருந்துவிட்டேன்...'' என்றான் அச்சுதன்.

''பிரபுல்லா உங்களுடையவள்தான்!'' என்று வெட்கத்துடன் தலையைக் குனிந்தாள்.

''பிரபுல்லா என்னுடையவள்தான்; ஆனால் பிரபுஸ்ரீ கலையுலகிற்குச் சொந்தமானவள்!''

''அப்படியென்றால்?''

''பிரபு!... நான் முதல் முதல் சினிமாவில் நடிக்க ஆரம்பிக்கையில் அம்மா ஆயிரம் ஆட்சேபம் சொன்னாள். கடைசியில் நான் நட்சத்திரங்களை மணந்து கொள்வதில்லை என்று சத்தியம் செய்து கொடுத்த பிறகுதான் அனுமதி கொடுத்தாள். அப்புறம்தான் நான் உன்னைப் பார்க்கத் தஞ்சைக்கு வந்தது.''

சில நிமிஷங்கள் இருவரும் ஒன்றும் பேசா மல் மௌனமாயிருந்தனர். பிறகு ''நான் இனிமேல் நடிப்பதை விட்டுவிடுகிறேன்.... இந்தப் படத்திலும் வேறு யாரையாவது போட்டுவிடச் சொல்கிறேன். அப்பொழு தாவது என்னை ஏற்றுக் கொள்வீர்களா?'' என்றாள் பிரபுல்லா.

''நிச்சயமாக! ஆனால் கலையுலகம் ஒரு நல்ல நடிகையை இழந்துவிடுமே?'' என்றான் அச்சுதன்.

''எந்த உலகமும் ஒரு தனிப்பட்டவரை நம்பியிருக்கவில்லை. இந்த பிரபுஸ்ரீ போனால் இன்னொரு ஸ்ரீ வந்துவிட்டுப் போகிறாள்!''

அதற்குள் அடுத்த செட்டிலிருந்து அச்சுத னுக்கு அவசர அழைப்பு வந்தது. ''பிரபு! எனக்கு ஒரு மணி நேர வேலை இருக்கு.... அதை முடிச்சுவிட்டு வந்துவிடுகிறேன்... அதற்குள் நன்றாக யோசித்து ஒரு முடிவுக்கு வா...'' என்று கூறிவிட்டுப் போய்விட்டான்.

பிரபுல்லாவின் மனம் மகிழ்ச்சியால் துள்ளி யது. இருந்தாலும் தயாரிப்பாளரிடம் தான் நடிக்கப் போவதில்லை என்பதை எப்படிச் சொல்வது என்று புரியாமல் குழம்பினாள்.

''வணக்கங்க!''

''யாரு?'' என்று திரும்பிப் பார்த்தாள்.

''பத்திரிகை நிருபர்!'' என்று அறிமுகம் செய்தவாறு எதிரிலிருந்த நாற்காலியில் அமர்ந்தார் ஒருவர். பிரபுல்லாவுக்கு ஒன்றும் புரியவில்லை. ''நீங்கள் யாரைப் பார்க்கவே ணும்?'' என்றாள்.

''உங்களைப் பேட்டி காண வந்தேன்...''

''என்னையா?''

''ம்... நீங்கள் நடிக்கும் முதல் படம் இதுதானே?''

''ஆமாம்!''



''நானும் பார்க்கிறேன், எதுக்காக நீங்க காலை யிலிருந்து இந்தக் கோலத்தில் இருக்கீங்க?''

''நாளைக்கு நம் குழந்தைகளைப் பள்ளிக்கூடத் தில் சேர்த்ததும், அவர்களுக்கு ஸ்பெஷல் பீஸ், கிளாஸ் சம்பளம், நோட்புக்ஸ் இவைகளுக்கு எல்லாம் பணத்தைச் செலவழிச்சதற்கப்புறம் நான் எப்படி இருப்பேன் என்கிறதை இப்பவே ஒத்திகை பார்த்துக்கிறேன்.''

''முதல் படத்திலேயே நட்சத்திரப் பத வியை அடைந்து விடுவீர்கள் என்று பேசிக் கொள்கிறார்களே?''

''அப்படியா?''

''நீங்கள் நட்சத்திரப் பதவி அடைந்தால் வெளி நாடுகளுக்கெல்லாம் செல்வீர்களா?''

''போகலாம்!''

''தயாரிப்பாளர்களுடன் ஒத்துழைப்பீர் களா?''

''நிச்சயமாக!''

''நீங்களே சொந்தத்தில் படம் தயாரிக்கும் உத்தேசம் உண்டா?''

''இல்லை!''

''நீங்களே படங்களை டைரக்ட் செய் வீர்களா?''

''செய்யலாம்.''

''நீங்கள் காதல் மணம் புரிந்து கொள் வீர்களா.''

''திருமணமா...? சூச்...!''

''நீங்கள் என்ன கார் வாங்குவீர்கள்?''

''யோசிக்கணும்!''

''நீங்கள் புதிதாகப் பங்களா வாங்கினால் காவலுக்கு ஒரு தமிழனைப் போடுவீர்களா, கூர்க்காவைப் போடுவீர்களா?''

''தமிழனைத்தான்!''

''உங்கள் தமிழ்ப் பற்றுக்கு எங்கள் பாராட் டுக்கள்! நீங்கள் கலைக்காகப் பிறந்தவர். உங்கள் கலை ஆர்வம் வாழ்க!''

நிருபர் விடை பெற்றார். ஒருசில நிமி ஷங்கள் பிரபுல்லா ஏதேதோ எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள். அச்சுதன் திரும்பினான்.

''என்ன முடிவு செய்தே பிரபு? நடிப்பதை விட்டுவிடுகிறாயா?''

''இல்லை; நான் கலைக்காகப் பிறந்திருக் கேனாம்!'' என்றாள். அடுத்த சில நிமிஷங் களில் செட்டுக்குள் போய்விட்டாள்!

CTC டஸ்ட் டீ தரமான தேநீரின் சுவையையும் அழுத்தமான தேநீர் சத்தையும் அளிக்கிறது

# சூப்பர் டஸ்ட் கிடைப்பவற்றுள் மிகச்சிறந்த CTC டஸ்ட் டீ

ப்ரூக் பாண்ட்
நிபுணர்களால் பக்குவம்
செய்யப்பட்டிருப்பதே
அது சிறந்து
விளங்கக்காரணம்




* க்ரஷ், டியர், கர்ல் — இந்த தனிப்பட்ட டீ தயாரிக்கும் முறையானது விரைவில் கரையவும், மிகுந்த தேயிலைச்சத்துக்கிடைக்கவும் உறுதியளிக்கிறது.




"சித்தப்பா! சித்தப்பா!"

"ஏண்டா, இப்படிக் கத்தறே! நான் என்ன செவிடா?...."

"எழுந்திருங்கோ எழுந்திருங்கோ, சித்தப்பா! நம்ப கம்பார்ட்மெண்ட் அதோ கடைசியிலே இருக்கு."

"டேய், மணி! சாமான்களை எண்ணிச் சரி பாருடா...."

"நாலு படுக்கை. நாலு பெட்டி. இரண்டு கூடை, இரண்டு பை, கூஜா."

"சித்தப்பா!... இதுதான் நம்ப இடம். எட்டு சீட்டுக்களும் இரண்டு பெர்த்துக்களும் நமக்குத்தான்..... நீங்க சௌகரியமா இப்படிக் கீழே இரண்டு பெஞ்சுகளுக்கு நடுவிலே படுத்துக்குங்கோ! நாங்க அட்ஜஸ்ட் பண்ணிக் கொண்டிரும். வேறே யாரும் இங்கே வர மாட்டா."

"ஏண்டா! ராத்திரி முழுதும் கீழேயாடா முடங்கச் சொல்றே?"

"சித்தப்பா! இந்த இரண்டு பெஞ்சுகளிலும் நாங்கள் 'அட்ஜஸ்ட்' பண்ணிக்கணுமே, அதனாலேதான் பெஞ்சிலே படுக்க வேண்டாம்னு...."

"நான் மேல் பெர்த்திலே ஏறிப் படுத்துடறேண்டா! சௌகரியமாக இருக்கும் போல் இருக்கே?"

"சரியாப்போச்சு! சித்தப்பாவுக்குத் தன் வயசு இருபதுன்னு எண்ணம் போலிருக்கு. எழுபதைத் தாண்டி எத்தனையோ நாளாச்சு."

"சித்தப்பா! அந்த வம்பெல்லாம் வேண்டாம். காலைக் கழுத்தைச் சுளுக்கிக்கும். உங்களாலே ஏறவும் முடியாது. இறங்கவும் முடியாது. கும்பகோணத்துக்கு வண்டி போற போது காலம்பற மூணு மணி. நல்ல தூக்கத்திலே இருப்பீங்க."

"மாயவரத்திலேயே இறங்கிட்டாப் போச்சு. அந்த வெற்றிலைப் பையை எடுடா! வண்டி புறப்படறதுக்குள்ளே ஒரு தடவை போட்டுத் துப்பிட்டு மேலே போயிடறேன்."

"ஹூம்! அதுவும் நல்லதுதான்! ஏழு தடவை வெற்றிலை போடறேன்னு எழுந்து உட்கார்ந்து தொணதொணக்க மாட்டார்."

"உஷ்! பாலு சும்மா இருக்க மாட்டே? சித்தப்பா!... சாம்பார் சாதம் தயிர் சாதம் பொட்டலம் இருக்கு. ஒருவழியாச் சாப்பிட்டுட்டு மேல் பெர்த்துக்குப் போங்களேன்."

"ஒண்ணும் வேண்டாம்! ரயிலுக்குக் கிளம்பறதுக்கு முன்னாலேயே நான் சாப்பாட்டை முடிச்சுண்டுட்டேன். இனிமே காலை ஐந்தரை மணிக்குக் காப்பியைக் காண்பிச்சாப் போதும்."

"மணி! சாமான்களையெல்லாம் கீழே தள்ளி வைடா! பதிமூணு சாமான்; பத்து நபர்கள். அத்தை! நீங்க அந்த ஓரத்துக்குப் போயிடுங்கோ!.... மெதுவா! மெதுவா...! டேய், கோபு! பாலு! சித்தப்பாவைப் பிடிச்சுக்குங்கடா!... தலையைக் கீழே குனிஞ்சுக்குங்கோ சித்தப்பா!... அப்பாடா! பக்கத்துக் கம்பியைப் பிடிச்சுக்குங்கோ!... இறங்கற போது ஜாக்கிரதையா இறங்கணும்!"

"ஏண்டா, தாம்பரமா?"

"ஆமாம், சித்தப்பா!"

"ஒரு கப் காப்பி வாங்கேன். பசிக்கிறாப் போலே இருக்கு."

"கம்பார்ட்மெண்ட் பிளாட்பாரம் கோடியிலே நிற்கிறது. ஸ்டாலுக்குப் போய் வாங்கி வருகிற வரை வண்டி நிற்காது. அதனாலே செங்கல்பட்டிலே காப்பி வாங்கித் தந்துவிடுகிறேன்."

"மணி, செங்கல்பட்டு வந்துடுத்து! காப்பியோடு பூரி கிழங்கும் இருந்தால் வாங்கிண்டு வா! பசிக்கிறாப் போலிருக்கிறது."

"இரண்டு செட்டா வாங்கிண்டு வந்துடறேன். பாதி ராத்திரியிலே விழுப்புரத்திலே பூரி கிரி கிடைக்குமோ, என்னவோ? சித்தப்பாவுக்குத் திடீர்னு பசித்தால்......"

"போகாமல் இருக்க மாட்டே? வயசானவா அப்படித்தான் இருப்பா!.... சீக்கிரம் போ!"

"என்னடா இது!... படுக்கைகளை எல்லாம் அவுத்துப் போட்டுட்டீங்களே. அப்படியே வைச்சுச் சாய்ந்துகொள்ளக் கூடாது. பதிமூணு சாமான்! பத்துப் பேர். மொத்தம் இருபத்தி மூணு அயிட்டம். கும்பகோணத்திலே இறங்கற போது எல்லாம் செக் பண்ணிட்டு மடமடன்னு இறங்கணும். முதலாவது தூக்கக் கலக்க வேளை! இரண்டாவது வண்டி நாலு நிமிஷங்கள்தான் நிற்கும்."

"டேய்!..... வண்டி நிற்கிறதே!.... விழுப்புரமாடா?"

"ஆமாம், சித்தப்பா! நீங்க தூங்கலியா?"

"கொஞ்சம் கண்ணை அசந்தேன்! ஒரு வெற்றிலை போட்டுத் துப்பினால் தேவலை."

"கீழே இறங்கி வந்துடறேளா? கோபு! சித்தப்பா இறங்கி வந்தால் நீ ஒரு பத்து நிமிஷம் பெர்த்திலே காலை நீட்டிப் படுத்து ரெஸ்ட் எடுத்துக்கோ!"

"வேண்டாண்டா!.... புகையிலைப் பொட்டலத்தை எங்கேயோ வைச்சுட்டேன்! சூடாப் பால் வந்தா வாங்கு!...."

"டேய், மணி!"

"கோபு!"

"என்னடா, எல்லாரும் ஒரே கும்பகர்ணனா தூங்கிட்டீங்க? வண்டி ஆடுதுறை ஸ்டேஷன் தாண்டிடுத்துடா!.... எழுந்திருங்கடா!"

"ஐயையோ! மாயவரம் ஜங்ஷன் வந்தது போனதுகூடத் தெரியலேடா!"

"மொத்தம் இருபத்தி மூணு. இருபத்தி மூணு! சாமான்களையெல்லாம் இப்படி ஓரமாய் இழுத்து வையுங்கோ?...."

"திருவிடைமருதூர் ஸ்டேஷனும் போயாச்சு!"

"இருபத்து மூணு. இருபத்தி மூணு! இறங்கினதும் 'செக்' பண்ணணும்."

"அத்தை! இறங்கு!... மணி இந்தப் பெட்டியைப் பிடிடா!"

"அப்பாடா!... இருபத்தி மூணு! கரெக்ட்! கார்ட் சார்! டாட்டா!"

"சம்பந்தி ஆத்துப்பேரெல்லாம் தயாரா வந்திருக்கா."

"சித்தப்பா! சித்தப்பா! அவரைத் தாண்டா பெரிய மனிதரா லட்சணமா அறிமுகப்படுத்தி வைக்கணும் முதலில்."

"சித்தப்பா!... பெஞ்சிலேயே போய் உட்கார்ந்துட்டாரா?...."

"ஐயையோ! சித்தப்பா வண்டியிலிருந்தே இறங்கலே!... அப்பர்பெர்த்திலேயே இருக்கிறார்...."

"அட ராமசந்திரா!... நான் அப்பவே சொன்னேன்! இருபத்தி மூணு இருபத்தி மூணுன்னு முட்டிண்டேனே!"

"இருபத்து மூணு நான் எண்ணினேனே?"

"பாவிப் பயல் கோபு நாலு படுக்கையைப் பிரிச்சு ஐந்தாகக் கட்டிட்டான்! அதுதான் கோளாறு!"

"ஒரு டாக்ஸி பிடிச்சுண்டு தஞ்சாவூருக்கு ஓடுங்கடா! அதுதான் நெக்ஸ்ட் ஸ்டாப்!... கோபு, நடராஜா! நீங்களும் போங்கோ. பத்திரமா இறக்கணும், கீழே! தஞ்சாவூரை விட்டா அப்புறம் திருச்சி."

"என்ன மனுஷன்! கும்பகோணத்திலும் முழிச்சுண்டு ஒரு பூரி கிழங்கு கேட்டிருக்கக் கூடாதோ? இறக்கியிருப்போமே!"

---

# படித்துப் பாருங்கள்

## சித்ர சங்கீதம்

இசை என்பது செவி வழியே கற்கப்படுவது. எனினும், (Graph Chart) போன்றவற்றை நல்ல முறையில் உபயோகப் படுத்தினால், கண்ணாலும் கண்டும் சங்கீத சாஸ்திரத்தில் பல அம்சங்களைக் கற்க முடியும். இவ்வாறே இந்நூலில் வாத்தியங்களின் சித்திரம், மேளகர்த்தா முறையை விளக்கும் படம் ஆகிய பல அம்சங்களும், சங்கீத சம்பந்தமான பல குறிப்புகளும் சுவாரசியமான விதத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூலுக்குத் தமிழ் நாடு சங்கீத நாடக சங்கம் பொருளுதவி செய்திருப்பது பொருத்தமே. இசைப் பள்ளிகள் இந்நூலைப் பயன்படுத்திக் கொள்ளுமாக.

ஆசிரியர்: ஸ்ரீமதி ராஜம்மாள் விஜயராகவன், கிடைக்குமிடம்: மியூஸிக் பப்ளிஷிங் ஹவுஸ், 4, பந்தர் தெரு, சென்னை—1; விலை: ரூ. 5-00.

## அறவழி வாசகம்

அழகான படங்களுடன் எழுத்தைப் போதிக்கும் முறை உயர்வானதாகக் கருதப்படுகிறது. இளம் உள்ளங்கள் படத்தைப் பார்த்துச் சொல்லைக் கற்றும் பிறகு இலகுவாகவே எழுத்தையும் கற்றுக்கொள்கின்றன. எழுத்தைக் கற்றால் மட்டும் போதாது. கூடவே இறை உணர்வையும் அறவழியையும் அவர்கள் கற்க வேண்டும். இந்து சமுதாயத்தின் அருமை பெருமைகளையும் உணர வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் உருவானது அறவழிவாசகம் வரிசையிலே முதற் புத்தகம்.

காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் திரு. பு. மா. ஜயசெந்தில்நாதன் கருத்தோடு போதனா முறையின் சிறப்புத் துலங்க இந்நூலைப் படைத்துள்ளார்; போதிக்கும் ஆசிரியர்களுக்கும் பொறுப்பான வேலை வைத்துள்ளார். முதல் வகுப்பு படிக்கும் மாணவர்களின் மனத்தில் பதியும்படியாகப் பல நாயன்மார்கள்-பக்தர்களின் கதைகளை அவர்கள் கூறியாக வேண்டும். ஏராளமான மூவர்ணப் படங்களுடன் அழகாக அச்சாகியிருக்கிறது இந்த அருமையான தமிழ் பாட நூல்.

வெளியிட்டோர்: புராதன கலாசாரக் கல்வி ஸ்தாபனம், 20-1, காஸ்வாய் குருக்கள் தெரு, காந்தி நகர், சென்னை-20. விலை ரூபாய் 1-50.

## வாழ்க, நீ எம்மான்!

சொல்லைச் செயலாக்கிக் காட்டி வாழ்ந்தவர் காந்தியடிகள். அஹிம்சையும் சத்தியமுமே உருவாகி நின்றவர். எனவேதான் கவிஞர் உள்ளங்களைக் கொள்ளை கொண்டு காவிய நாயகனாகத் திகழ்ந்தார். பாரதத்தின் பல்வேறு மொழிக் கவிஞர்களும் காந்தியடிகளை எவ்வுருவத்தில் கண்டார்கள்? எப்படியெல்லாம் போற்றிப் புகழ்ந்தார்கள்? இதை அறியும் ஆசையில், அறிவிக்கும் ஆவலில் கவிஞர் வா. மூ. சேதுராமன் மலையாளம் தொடங்கி, பஞ்சாபி முடிய மொழிக்கு இரு கவிதைகளாகத் தேர்ந்தெடுத்துச் செய்யுள் ஆரம் தொடுத்திருக்கிறார். அத்தொகுதியே 'வாழ்க நீ எம்மான்' என்று பாரதியோடு குரல் கொடுத்து வாழ்த்தும் இந்த நூல்.

பெயரளவில் காந்தியம் பேசுபவர்களை, வாழும் கோட்சேக்களாக உருவகித்துக் காந்தியத்தை எப்படிக் கொல்கிறார்கள் என்பதைத் தொகுத்தவரது சொந்தத் தமிழ்க் கவிதையே எடுத்துக் காட்டுகிறது.

'நாம் வாழப் பிறர் தாழ அகிம்சை கொன்று
பயமின்றி நடக்கின்றார்! இவர்கள் எல்லாம்
பக்தர்யாம் காந்திக்கே என ஆர்க்கின்றார்.'

இப்படி மனம் புண்பட்டுப் பேசும் கவியுள்ளம் தொகுத்த நூலை வாங்கிப் படித்துப் பயனுற விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதலாம். விற்பனை உரிமை: பாரி நிலையம் 59, பிராட்வே, சென்னை-1; விலை: ரூ. 3.00.


SANKAR
CEMENT




SANKAR
I C
CEMENT




சென்ற 3-5-70 இதழில் வட்ட மேஜைப் பகுதியில் வி. ப. வைத்தியலிங்கம் அவர்களின் கடிதம், எப்படி சினிமா டிக்கெட் விஷயத்திலும் கறுப்பு மார்க்கெட் மலிந்து கிடக்கிறது என்பதைத் தெளிவுபடுத்துகிறது. அவர், தியேட்டர் அதிகாரிகளும் அரசும் இவ்விஷயத்தில் தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கோருகிறார்.

அளவுக்கு மீறிய அரசாங்க கன்ட்ரோல்களும், குறுக்கீடுகளும் மலிந்து கிடக்கும் இந்நாளில் மக்கள் மேலும் மேலும் அரசாங்கத் தலையீட்டை வேண்டுவது சமுதாயத்தில் உள்ள ஒரு குறைபாட்டையே புலப்படுத்துகிறது.

கறுப்பு மார்க்கெட்டில் டிக்கெட்டுக்களைச் சுலபமாக விற்றுவிடலாம் என்னும் நம்பிக்கையில்தானே ஒரு சிலர் அத்துறையில் ஈடுபாடு கொண்டுள்ளனர்? அந்தப் பழக்கத்துக்குச் சலுகை தராமல் மக்கள் ஒரு நாளோ, இரண்டு நாளோ பொறுத்திருந்தால் என்ன? சினிமாவில் நெரிசல் இருக்கும் முதல் சில தினங்களில் சினிமாவுக்குப் போகாமலிருந்து கூட்டம் குறைந்ததும் போவது என்று தீர்மானித்தால் கறுப்பு மார்க்கெட்காரர்கள் கண் திறக்கும். மக்கள் எல்லாவற்றுக்கும் அரசாங்கத்தின் துணையைக் கோராமல் தாங்களாகவே சுய முயற்சியால் பல காரியங்களைச் சாதித்துக் கொள்ளப் பழக வேண்டும்.

சென்னை 18
4-5-70 கே. ராஜா

மறைந்த தமிழக முதல்வர் திரு அண்ணாதுரை அவர்களுக்கு உருவச்சிலை அமைப்பதற்காக ஒரு பரிசுத் திட்டம் உருவாக்கி அதன் மூலம் எங்கள் வட்டத்தில் உள்ள பொது மக்களையும் சிறுவர்களையும் ஏமாற்றிய சில சமூக விரோதிகளைப் பற்றி இங்கு குறிப்பிட விழைகிறேன்.

எங்கள் ஊரில் சென்ற 2-2-70, 3-2-70 இரு தினங்களும் ஒரு வாடகைக் காரில் வந்த சிலர் அதிர்ஷ்ட எண்களுள்ள பத்துக் காசு பிஸ்கட் பொட்டலங்களை விற்பனைக்குக் கொணர்ந்தனர். விற்பனையில் பரிசுத்தொகை ரூ. 1325 (25 பரிசுகள் மூலம்) போக மீதியைக் கொண்டு அண்ணாவுக்கு உருவச் சிலை அமைக்கப் போவதாகவும் குலுக்கல் முடிவுகள் முக்கியமான தமிழ் தினசரிகளில் வெளியிடப்படும் எனவும் அவர்கள் கூறினர். திரு அண்ணா மீது கொண்ட அன்பினாலும் பிஸ்கட் பொட்டலத்தின் விலை பத்துக் காசுகள்தானே என்பதாலும் தங்கள் அதிர்ஷ்டத்தின் மீது கொண்ட அசைக்க முடியாத நம்பிக்கையினாலும் மக்களும் சிறுவர்களும் ஏராளமான பிஸ்கட் பொட்டலங்களை வாங்கினர். காலித உறையைப் பத்திரப்படுத்திக் குலுக்கல் முடிவு வெளியாகும் தமிழ்ப் புத்தாண்டு தினத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். ஆனால் மாதம் மூன்று கடந்தும் இதுவரை யாதொரு தகவலும் தினசரிகளில் வெளியிடப்படவில்லை. பெருவாரியான மக்கள் அநியாயமாக ஏமாற்றப்பட்டனர்.

அரசினரே லாட்டரிகளை நடத்திப் பொது மக்களைச் சூதாட்டத்தில் மோகம் கொண்டவர்களாகவும், சோம்பேறிகளாகவும் ஆக்கிக் கொண்டிருக்கும் இந்நாளில் இதுபோல் சில சமூக விரோதிகளும் மக்களை ஏமாற்றிப் பெரும் பொருள் குவிக்க முற்படுவதில் வியப்பில்லை. அரசாங்க அனுமதிப் பதிவு எண் என்று குறிப்பிட்டு, பிரபலமான தலைவர்களின் பெயரைப் போட்டு நடைபெறும் இது போன்ற ஏமாற்றுச் செயல்களைத் தமிழ்நாடு அரசு ஒடுக்கும் என்று எதிர்பார்க்கலாமா?

பொதுமக்கள் ஏமாறாமல் இருப்பார்களா?

நடராஜபிள்ளைசாவடி
21-5-70 ஜெ. குருமூர்த்தி

## பெட்டிக்குள் உள்ள கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

அரசியல் சாஸனத்தின் மூலகர்த்தர்கள் அளித்த புனிதமான வாக்குறுதியை மீறி, முன்னாள் மன்னர்களுக்கு ராஜமானியம் கொடுக்க மறுப்பவர்கள், இந்நாட்டு மன்னர்களாகிய நமக்கும் இந்த நிலையை ஏற்படுத்த மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?

தேசிய மயமாக்கப்பட்ட பாங்குகளில் டெபாஸிட் செய்யப்பட்ட பணங்களுக்கும் இந்தக் கதி ஏற்படலாமல்லவா? வாக்குறுதியை மீறும் அரசாங்கத்தை மக்கள் எப்படி நம்புவார்கள்?

சென்னை-30
28-5-70 ஆர். வேதம்

காலஞ்சென்ற சர்தார் வல்லபாய் படேலின் வேண்டுகோளுக்கு இணங்க மன்னர்கள் பாரதம் ஒன்றுபடத் தமது சலுகைகளைத் தியாகம் செய்தனர். தற்போது வழங்கப்படும் ராஜ மானியத் தொகையைக் கணக்கிட்டுப் பார்த்தால், அவர்கள் விட்டுக் கொடுத்துள்ள சலுகைகளைப் பத்து சதவிகிதம் கூட ஈடு செய்யாது. மேலும் இப்போது தரப்படும் மொத்த ராஜமானியத் தொகையே நாலு கோடி ரூபாய்கள்தான்; இது சோஷலிஸ டம்பாச்சாரித் திட்டப்படி பொதுத் துறையில் நடத்தப்படும் கனரக என்ஜினியரிங் ஸ்தாபனத்தின் (Heavy Engineering Corporation) நஷ்டத்தில் ஐந்தில் ஒரு பங்குதான். (கனரக என்ஜினீரிங் ஸ்தாபனத்தின் நஷ்டம் இருபது கோடி என மதிப்பிடப்பட்டுள்ளது).

மைசூர்-4
1-6-70 என். ஜயராமன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

க்ரூக்ஸ்
லாக்டோ-காலமைன்
அஸ்ட்ரின்ஜென்ட்டா?

ஆமாம்!

ஒரு அஸ்ட்ரின்ஜென்ட் போல க்ரூக்ஸ் லாக்டோ-காலமைன் உங்கள் சருமத்தை மாசுமறுவின்றிப் பாதுகாக்கிறது.

காலமைன், விட்ச் ஹேஸல் இரண்டும் இணைந்து, உங்கள் சருமத்தைத் தூய்மைப் படுத்தி, பாதுகாத்து, பட்டுப்போன்ற மெருகை அளிக்கிறது.

க்ரூக்ஸ் லாக்டோ-காலமைன்
பரிபூரண
ஒப்பனை
சாதனம்




இப்போது சின்னஞ்சிறு
சைஸிலும் கிடைக்கிறது

க்ரூக்ஸ் இண்டர்ப்ரான் லிட்., பம்பாய்-25.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon